
चन्दामामा
चांदोबा
CHANDAMAMA
चन्दामामा



# அம்புலிமாமா

## பிப்ரவரி 1997



## பொருளடக்கம்






**தனிப்பிரதி ரூ.6.00**

**வருட சந்தா ரூ.72.00**




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி

## இனியும் இந்த பயங்கரம் இல்லை!





பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் 'ராகிங்' என்ற பயங்கரக் கொடிய செயல்கள் நடக்கின்றன. உயர் வகுப்பு மாணவர்கள் புதிதாகச் சேரும் மாணவர்களைப் பலவிதத்தில் துன்புறுத்தி வேடிக்கை பார்ப்பது கொடிய வழக்கமாக இப்போது ஆகிவிட்டது.

முன் நாட்களில் வேடிக்கையாகச் செய்யப்பட்ட இக்குறும்புகள் தற்போது பயங்கரச் செயல்களாக மாறிவிட்டன. இந்த பயங்கர, அருவருக்கத்தக்க செயல்களால் மனம் உடைந்துபோய் பல புதிய மாணவர்கள் தற்கொலை கூடச் செய்து கொண்டு விட்டார்கள். அது மட்டுமா? இந்த பயங்கரச் செயல்கள் கொலைகளில் கூடப் போய் முடிந்துள்ளன!

அண்மையில் தமிழ் நாட்டில் நடந்த 'ராகிங்' களால் நிகழ்ந்த பயங்கர நிகழ்ச்சியைக் கண்டு தமிழக அரசு உடனேயே 'ராகிங்'கைக் கல்வி நிறுவனங்களில் தடை செய்து ஒரு அவசரச் சட்டத்தை அறிவித்துள்ளது. இது பெற்றோர்களுக்கும், மாணவர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் ஆறுதலையும் மகிழ்ச்சியையும் அளிப்பதாகும். இச் சட்டம் 'ராகிங்' செய்பவர்களுக்குக் கடும் தண்டனை விதிக்க வழி செய்திருப்பதால் இனியும் கல்வி நிலையங்களில் இத்தகைய பயங்கரச் செயல்கள் 'ராகிங்' என்ற பெயரில் நடைபெறாது என நம்புவோம்.

மதிமுகம்: 100 பிப்ரவரி 1997 புன்னகை: 2

தனிப்பிரதி: ரூ.6.00 வருட சந்தா: ரூ.72.00



# விஜயா ஹார்ட் பவுண்டேசன்

## உங்கள் இதய பராமரிப்புக்கான அமைப்பு

## இப்போது இயங்குகிறது

**முக்கியமான அம்சங்கள்**

- விஜயா மெடிக்கல் அண்டு எஜுகேஷனல் டிரஸ்டின் அற்புதமான அங்கம்.
- 90 படுக்கை வசதிகள். இவற்றில் பாதி நவீன வசதிகளுடன்
- சமீபத்திய நுட்பமான மருத்துவ சாதனங்கள் பொருத்தப்பட்ட அமைப்பு
- மூத்த மருத்துவ நிபுணர்களால் வழங்கப்படும் 24 மணி நேர எமர்ஜென்சி சேவை
- இரண்டு ஆபரேஷன் தியேட்டர்கள். 20 போஸ்ட் ஆபரேடிவ் படுக்கைகள்
- அனுபவம் வாய்ந்த மருத்துவ நிபுணர்கள், நர்ஸ்கள், மற்றும் மருத்துவ ஊழியர்கள்
- சமூகப் பிரக்ஞையுள்ள நிர்வாகம்



**DEPARTMENT OF CARDIOLOGY**

டாக்டர் கே.என். ரெட்டி, MD., DM., FCCP., FICC
டாக்டர் கே.கே. ஹரிதாஸ், MD., DM., DNB
டாக்டர் எம். விஜயகுமார், MD., DM.
டாக்டர் டி. இளங்கோவன், MD., DM.
டாக்டர் கே. சந்திரசேகரன், MD., DM.
டாக்டர் ஏ.எல். நாராயணன், MD., DM.
டாக்டர் சி.ஜி. ஸ்ரீநிவாஸ், MD., DM.
டாக்டர் பி. சந்திரசேகர், MD., DNB.
டாக்டர் ஆர். கணேசன், B.Sc., MD.
டாக்டர் ஆர். ரங்க பிரசாத், MD.

**DEPARTMENT OF CARDIOTHORACIC SURGERY**

டாக்டர் பி. ரமேஷ் சேஷாத்ரி, M.S., DNB
டாக்டர் பால். பொன்ராஜ், MS., FRCS. (BD)
டாக்டர் ஏ. ராம் மோகன், MS., DNB
Dr. **ASHUTOSH RAGHUVANSHI,** MS., MCh.

**DEPARTMENT OF LABORATORY MEDICINE**

டாக்டர் வி.என். விஸ்வநாத ராவ், PhD, (Bio Chemist)
டாக்டர் திருமதி. நீலாமணி மூர்த்தி, MD (Pathologist)
டாக்டர் கனிதா, MD. (Bio Chemist)
டாக்டர் கே. பிரபாகர், (Transfusion Medicine)

Dr. N. KUMAR, MBBS., MRSH (Lond) FCCP. (Incharge OPD)

**DEPARTMENT OF NURSING**

Mrs. **Celine Francis,** Nursing Superintendant
Miss. **Chinnamma Thomas,** Nursing Director (V.H.F.)

*மேலும் விபரம் பெற தொடர்பு கொள்ளுங்கள் :*

**விஜயா மருத்துவமனை**

180, என்.எஸ்.கே. சாலை, சென்னை 600 026. போன் : 4839131, 4842931, 4843028, 4843029

செய்திகளும் தகவல்களும்

# வளைகுடா நாடுகள்

வளைகுடா நாடுகள் எனப்படுபவை பாரசீக வளைகுடாவைச் சுற்றியுள்ள ஏழு நாடுகளையே. இவற்றை 'யுனைடெட் அரப் எமெரிட்ஸ்' எனக் கூறுகிறார்கள். ராஸ்–அல்–காய்மா, உமால் காய்வான், அஜ்மான், ஷார்ஜா, துபாய், அபுதாபி, புஜாய்ரா என்பன அந்த ஏழு நாடுகள். கடந்த ஆண்டு டிசம்பர் 2ல் யுனைடட் அரப் எமெரிட்ஸ் தனது வெள்ளி விழாவைக் கொண்டாடியது.

நூற்றைம்பது நாடுகளுக்கு முன் இந்த நாடுகள் 'ட்ரூஸியல் ஸ்டேட்ஸ்' என்ற பெயரில் இருந்தன. 1820ல் இவை ஆங்கில அரசுடன் ஒரு உடன்படிக்கை செய்து கொண்டதால் அவற்றிற்கு இப்பெயர் ஏற் பட்டது. இதை ஆண்ட 'ஷேக்'கள் தம் நாடு களில் ஆங்கிலப் படைகளை வைத்துக் கொள்ள உடன்படிக்கை செய்து கொண்டார் கள். அபுதாபியின் ஷேக் ஜாயத் கலீபா அல் நாஹ்யான் 1855லிருந்து 1909 வரை நீண்ட காலம் தம் நாட்டை ஆண்டார். இப்போதைய எமெரிட்ஸ் தலைவரின் சகோதரர் ஷேக் சக் செட் 1928ல் பதவிக் வந்தார். அவர் தம்பி ஷேக் ஜாயத் உள்ளூர் மத குருவிடம் கல்வி கற்று பாலைவனப் பகுதிகளைச் சுற்றிப் பார்த்தார். அப்பகுதிகளில் எண்ணெய்க் கிணறுகளைத் தோண்டும் ஆங்கிலக் கம்பெனிகளுக்கு அவர் உதவினார். அவர் எண்ணெய்த் தொழில் நுணுக்கங்களை நன்கு கற்றார்.

எண்ணெய்க் கிணறுகளே தம் நாட்டின் தங்கச் சுரங்கங்கள் என்பதை அவர் புரிந்து கொண்டார்.

அவர் கிழக்குப் பகுதியில் ஷேக்கின் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டார். அவரது பொறுப்புகள் மேலும் அதிகரித்தன. அல் அபன் பகுதியை விவசாயம் செய்வதற்கு ஏற்ப மாற்றினார். இதனால் அப்பகுதி மக் களின் வாழ்க்கைத் தரம் உயர்ந்தது. பின்னர் இவர் அபுதாபியின் அதிபரானதும் எண்ணெய்க் கிணறுகளில் கிடைக்கும் லாபத்தை நாட்டிற்கு நன்மை தரும் பல திட்டங்களுக்குப் பயன்படுத்தினார். பிரிட்டன் தன் படைகளை வளைகுடாப் பகுதியிலிருந்து திரும்பப் பெற எண்ணியது. இதனால் அதனுடனான உடன்படிக்கை முடி யவே, ஷேக் ஜாயத் மற்ற ஆறு நாடுகளுடன் கலந்து பேசி பெடரேஷன் ஏற்படுத்தினார்.

இந்த எழு நாடுகளின் பெடரேஷன்




1971ல் யுடைடெட் அரப் எமெரிட்ஸ் என்றா கியது. 1971 டிசம்பர் 2ல் இதற்கான அரசியல் நிர்ணய சட்டம் வெளியானது. அபுதாபியின் ஷேக் ஜாயத் பின் சுல்தான் எமெரிட்ஸின் தலைவரானார். இப்பகுதி ஐந்தாண்டு காலத் திற்கே என்றாலும் மீண்டும் மீண்டும் ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு முறை அவரே தலைவ ராகத தேர்ந்தெடுக்கப் பட்டு வருகிறார்.

ஏழு நாடுகளின் பெடரேஷன் ஏற்பட்ட தும் அவை கல்வித் துறையில் நல்ல முன்னேற் றம் கண்டன. தற்போது 84 சதவித மக்கள் கல்வி அறிவு பெற்றுள்ளனர். வெகு விரை வில் இந் நாடுகள் முன்னேற்றம் அடைந்து விட்டன.



# எப்படி உபசரிப்பதா!

பச்சையூரில் நாகப்பன் என்ற பணக்காரன் இருந்தான். அவன் தன் வீட்டிற்கு வருபவர்களை உபசரித்து விருந்தளித்து அனுப்பவது வழக்கம், அவன் மனதில் விருந்தினர்களை உபசரிப்பதில் தன்னை மிஞ்சுபவர்கள் யாருமே இல்லை என்று ஒரு எண்ணம் மிக ஆழமாகப் பதிந்து விட்டது.

அதற்கு ஏற்ப அவன் வீட்டிற்கு வந்து போகும் விருந்தாளிகளும் அவனது உபசாரம் பிரமாதம் என்று புகழ்ந்து விட்டு வேறு போனார்கள். அதையெல்லாம் கேட்டு நாகப்பனின் மனம் குளிர்ந்தது. ஆனால் ஒருமுறை அவனது வீட்டிற்கு விருந்தாளியாக வந்த காசிநாதன் என்பவன் ''வந்த விருந்தாளியை மனம் குளிரச் செய்வதில் சிவபுரி சிவசாமிக்கு அடுத்தபடியாக உங்களைக் கூறலாம்'' என்றான்.

அதைக் கேட்ட நாகப்பனின் முகம் சுண்டியது. அவன் காசிநாதனிடம் ''யார் அந்த சிவசாமி? அப்படி என்ன சிறப்பை அவரிடம் கண்டீர்கள்?'' என்று கேட்டான். காசிநாதனும் ஆச்சரியப்பட்டு ''சிவபுரி சிவசாமியைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டதில்லையா? தம் வீட்டிற்கு வரும் விருந்தினர்களை உபசரிப்பதில் அவருக்கு இணை அவரேதான். வேறு யாரும் இல்லை. அவரது உபசரிப்பை வார்த்தைகளால் வர்ணித்து விட முடியாது. நேரில் போனால்தான் புரியும்'' என்றான்.

மறுநாளே நாகப்பன் தன் ஊரை விட்டுக் கிளம்பி சிவபுரியை அடைந்தான். அவன் எளிதில் சிவசாமியின் வீட்டையும் கண்டுபிடித்து அங்கு சென்றான். அது சிறிய ஓட்டு வீடு. வீட்டுத் திண்ணை மீது சிவசாமி உட்கார்ந்திருந்தார். அவர் நாகப்பனைக் கண்டதும் எழுந்து வந்து வரவேற்று அவரைப் பற்றி விசாரித்தார். நாகப்பன் தான் வந்த உண்மைக் காரணத்தை மறைத்து தான் வைரக் கல் வியாபாரி

—சிவனார் செல்வன்—

என்றும் அவ்வூரில் வைரம் விற்க வந்திருப்பதாகவும் கூறினான்.

சிவசாமியும் ''வைர வியாபாரம் பற்றி என்றால் நவகோடி நாராயண னின் வீட்டிற்கு செல்லுங்கள். அவர் உங்களுக்கு நல்ல விலை கிடைக்கச் செய்வார்'' என்றார். அப்போது நாகப் பன் ''நான் உங்கள் வீட்டு விருந்தாளி யாக இருப்பதில் உங்களுக்கு எவ்வித ஆட்சேபணையும் இல்லையே'' என்று கேட்டான். சிவசாமியும் ''தங் களைப் பார்த்தால் பெரும் பணக்கார ராகத் தெரிகிறது. நானோ ஏழை. தங்களது அந்தஸ்திற்குத் தக்கபடி என்னால் உபசரிக்க முடியாது போய் விடுமோ என்றே அஞ்சுகிறேன்'' என்றார்.

நாகப்பனும் ''நான் உங்கள் வீட்டி லேயே தங்குகிறேன். உங்களுக்கு இஷ்டமில்லையென்றால் சொல்லி விடுங்கள். நான் நவகோடி நாராயண னின் வீட்டிற்குப் போய் விடுகிறேன்'' என்றான். சிவசாமியோ சட்டென அவன் கையைப் பற்றி இழுத்துக் கொண்டு வீட்டிற்கள் சென்றார். கை கால்களை அலம்பிக் கொள்ள அவ னுக்கு நீர் எடுத்துக் கொடுத்தார். கொஞ்ச நேரத்திற்குள் சிவசாமியின் மனைவியும் சமையல் செய்து முடிக் கவே அவர்கள் சாப்பிட உட்கார்ந்தார் கள். சாப்பாடு மிகவும் சாதாரணமே. ஆனால் ருசியாக இருந்தது.

சாப்பிட்டு முடித்த பிறகு நாகப்பன் தான் நவகோடி நாராயணன் வீட்டிற் குப் போய் விடுவதாகக் கூறினான். சிவசாமியோ ''கூடாது. இன்று முழு வதும் என் வீட்டிலேதான் நீங்கள் இருக்க வேண்டும். நாளை வேண்டு மானால் அவர் விருந்தாளியாகப் போங்கள்'' என்றார். ஒருநாள் முழுவ துமா அந்த வீட்டில் இருக்க வேண்டும் என்று நாகப்பன் யோசிக்கலானான். சாப்பாடோ சாதாரணம் தான். விருந் தாளிகளுக்கு அளிக்கும் பல வகைப்





TA-F2



பதார்த்தங்களைக் கொண்டதாகவும் இல்லை. இப்படி இருந்தும் காசி நாதன் ஏன் இவரைப் பற்றி உயர்வாக கூறினான் என்றே அவன் யோசித் தான்.

அப்போது. சிவாசாமியின் குடும் பத்தினர் அனைவரும் வந்து நாகப் பனைச் சுற்றி உட்கார்ந்து கொண்டு பச்சையூரைப் பற்றி விசாரித்தார்கள். அவன் சொன்னதைக் கவனமாய்க் கேட்டார்கள். நாகப்பனுக்கு நன்கு பாடத் தெரியும் என அறிந்ததும் அவனைப் பாடச் சொல்லி அவன் பாட்டைக் கேட்டு ரசித்தார்கள். அது வரை அவனை யாருமே பாடச் சொன்னதில்லை. அவர்கள் தன் பாட்டை ரசித்தது கண்டு உற்சாகத் துடன் மேலும் இரண்டு பாட்டுக் களைப் பாடினான். விருந்தாளி களுக்குச் சாப்பாடு போடுவதோடு நின்று விடாமல் அவர்கள் மனம் மகிழ அவர்களோடு பேசிப் பழக வேண்டும் என்பதை நாகப்பன் உணர்ந்தான்.

நாகப்பனும் அவர்களிடம் சிவபுரி யைப் பற்றி விசாரித்தான். சிவசாமி யும் ''எங்கள் ஊரில் பழங்காலக் கோவில் ஒன்று உள்ளது. கோட்டை யும் உள்ளது. இவற்றை நீங்கள் பார்க்க விரும்பினால் என் குழந்தைகள் உங் களை அழைத்துக் கொண்டு போய்க் காட்டுவார்கள். ஆனால் இவற்றை நடந்து போய்த்தான் பார்க்க முடியும். உங்களுக்கு சிரமமாக இருக்கலாம்'' என்றார்.

நாகப்பனும் தன்னால் அவ்வளவு தூரமெல்லாம் நடக்க முடியாது எனக் கூறி அக்குடும்பத்தினரைப் பற்றி மேலும் விசாரிக்கலானான். சிவசாமி யின் மனைவி நன்கு பாடுவாளாம். அவரது தம்பி ஒரு கவிஞனாம். குழந் தைகள் மண் பொம்மைகளை செய்வ தில் கைதேர்ந்தவர்களாம். அவர்களது திறமைகளையெல்லாம் அப்போதே பார்க்க விரும்புவதாக நாகப்பன் கூறினான்.

சிவசாமியோ ''நீங்கள் பயணக் களைப்பில் இருக்கிறீர்கள். இன்று இளைப்பாறுங்கள் பிறகு மெதுவாக அவற்றைக் காணலாம்'' என்றார். நாகப்பனோ ''அப்படி ஒன்றும் நான் களைத்துப் போய் விடவில்லை. உங் கள் திறமைகளைப் பார்க்கத் தயாராக இருக்கிறேன்'' என்றான். அதற்கு சிவசாமி ''அவசரமென்ன! நீங்கள் இன்னும் சில நாட்கள் இங்கு தங்கி அவற்றையெல்லாம் நிதானமாகப்

பார்க்கலாம். ஒரு நாளுக்கு ஒன்றாகப் பாருங்கள். நீங்கள் வேறு எங்கும் போய் விடக்கூடாது. எங்கள் வீட்டில் தான் தங்கவும் வேண்டும்'' என்றான்.

நாகப்பனும் மிகவும் சந்தோஷப் பட்டான். அவனுக்கும் அப்போதே எல்லாவற்றையும் பார்க்க விருப்பம் இருக்கவில்லை. வீட்டுக்கு வரும் விருந்தாளியை எவ்வாறு மதிக்க வேண்டும் என்பது அப்போது அவனுக்குப் புரிந்தது. இனிமேல் தன் வீட்டிற்கு வரும் விருந்தாளிகளிடம் தன்னைப் பற்றியே கூறக் கூடாதென வும், வந்த விருந்தாளியை உடனேயே வீட்டிலிருந்து அனுப்புவதும் முறையல்ல என்றும் அவன் தெரிந்து கொண்டான்.

சிவசாமியின் மனைவி நாகப்பனுக்கு என்னென்ன சாப்பிடப் பிடிக்கும் என்று கேட்டுத் தெரிந்திருந்ததால் அவனுக்குப் பிடித்தமான சமையலை அன்றிரவு செய்து உணவளித்தாள். சாப்பாடானதும் யாவரும் வேடிக்கையாகச் சற்று நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது சிவசாமி நாகப்பனைத் தனியாக அழைத்துப் போய் ''உங்களது நெடுநாளைய ஆசை எதாவது நிறைவேறாமல் இருந்தால் கூறுங்கள். அதைத் தீர்த்து வைக்கிறேன்'' என்றார்.

ஏழை சிவசாமி பணக்காரனான தனது ஆசையை எப்படித் தீர்த்து வைப்பான் என்றே நாகப்பன் யோசித்தான். ஆனாலும் சிவசாமி அப்படிக் கேட்டதற்குத் தக்க பதிலடி கொடுப்பது போல'' இப்படி நீங்கள் கேட்பது சரியல்ல. நான் எதாவது கேட்டு அதை உங்களால் நிறைவேற்ற முடியவில்லை என்றால் எனக்கும் மனவருத்தம் ஏற்படும். உங்களுக்கும் சங்கடமாயிருக்கும். எவரும் தம் சக்தியை அறிந்தே வாக்களிக்க வேண்டும்'' என்றான் நாகப்பன்.

சிவசாமியும் ''நீங்கள் கூறுவது





முற்றிலும் உண்மையே. என்னால் முடியும் என்பதால்தான் உங்களிடம் அவ்வாறு கேட்டேன். சங்கோசப்படாமல் உங்கள் விருப்பத்தைக் கூறுங்கள்'' என்று கேட்டார். அப்போது நாகப்பன் ''நான் தேவலோகம் போய் அப்சரப் பெண்களின் நாட்டியத்தைக் காண விரும்புகிறேன்'' என்று சற்று மிடுக்காகவே கூறினான்.

சிவசாமியும் ''சரி. நீங்கள் அந்தக் கட்டிலில் படுத்துக் கொள்ளுங்கள் உங்கள் விருப்பம் நிறைவேறும்'' எனக் கூறி நாகப்பனைக் கட்டிலில் படுக்க வைத்து விட்டுச் சென்றார். படுத்த மறுநிமிடமே நாகப்பன் அயர்ந்து தூங்கி விட்டான். அப்போது அவன் தேவலோகம் சென்று அப்சரப் பெண்களின் நாட்டியம் கண்டது போலக் கனாக் கண்டான். மறுநாள் காலை அவன் விழித்து எழுந்த போது மனம் மிகவும் திருப்தி அடைந்திருப்பது போல உணர்ந்தான். அவன் சிவசாமியைக் கண்டு தன் விருப்பத்தை நிறைவேற்றி வைத்ததற்கு நன்றி கூறி அந்தக் கனவைத்தான் எவ்வாறு காண முடிந்தது என்று கேட்டான்.

சிவசாமியும் ''அது கனவு அல்ல. உண்மையிலே நடந்த நிகழ்ச்சி. ஒரு முறை என் வீட்டிற்கு வந்த ஒரு விருந்தாளி என் உபசரிப்பால் மகிழ்ந்து ''நான் ஒரு யோகி. என் சக்தியில் பாதியை ஒரு உத்தமனுக்குக் கொடுக்க வேண்டும் என்பது என் விருப்பம். அதனால் யாருக்குக் கொடுப்பது எனத் தீர்மானிக்க ஊர் ஊராகப் போய் வருகிறேன். இன்று எனக்கு அதற்கு ஒருவன் கிடைத்து விட்டான். அது நீதான்! இன்று முதல் நீ விரும்புவது எவ்வளவு சாத்தியமில்லாததாக இருந்தாலும் நடக்கும், ஆனால் ஒரு நாளைக்கு ஒரு விருப்பம்தான் நிறைவேறும். எனவே நீ இதனால் எல்லாச் செல்வங்களைப் பெற்று இது போல விருந்தாளிகளை என்றென்றும் உபசரித்து வா'' என்று கூறித் தம் சக்தியில் பாதியை எனக்கு அளித்து விட்டுப் போனார். அதைக் கொண்டுதான் நேற்று உங்கள் விருப்பத்தை நிறைவேற்ற முடிந்தது. ஆனால் இந்த சக்தியை நான் வீண் வழியில் பயன்படுத்த வில்லை. எனது சுயநலத்திற்கும் பயன்படுத்த வில்லை. ஆசைக்கு ஒரு அளவே இல்லை. அது போகும் போக்கில் மனதை விட்டு விடக் கூடாது. மனதை அடக்கி ஒரு கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்க வேண்டும். இதுதான் நான் கற்ற பாடம். எனவே

இதைக் கொண்டு பணம் சம்பாதிக்க வில்லை. பிறர் மனதிலும் அநாவசிய ஆசைகளை வளர்க்கவில்லை. நான் எப்போதும் இருக்கும் நிலையில் இருந்து என்றென்றும் என் வீட்டிற்கு வரும் விருந்தாளிகளை உபசரித்து வரு கிறேன்'' என்றார்.

இதைக் கேட்ட நாகப்பன் ''ஆகா! நீங்கள் எவ்வளவு உயர்ந்தவர்! உங் களிடம் அரிய சக்தி இருந்தும் நீங்கள் பொன்னும் பொருளும் அடைய விரும்பவில்லை. பலவித ஆசை களுக்கு இடம் கொடாமல் மனதைக் கட்டுப்படுத்திக் கொண்டும் இருக் கிறீர்கள். உங்கள் வீடு தேடி வரும் விருந்தாளிகளை வரவேற்று அன்பு டன் உபசரித்து அவர்கள் விரும்பும் வரை உங்களோடு இருக்கச் செய் கிறீர்கள். நான் உங்களிடம் மனதில் சக்திக்கு அப்பாற்பட்ட ஒரு ஆசையை நிறைவேற்றும்படி என் அகம்பாவத் தால் கூறினேன். அதை எந்த மனிதனா லும் செய்ய முடியாது. ஆனால் நீங் களோ என் விருப்பத்தை உங்களிட முள்ள சக்தியால் நிறைவேற்றி வைத் தீர்கள். இது மட்டுமல்ல. நீங்கள் என் நாவிற்கு மட்டும் ருசியான உணவு அளிக்கவில்லை, என் செவிக்கும் உணவு அளித்தீர்கள். என் மனம் குளிர உபசாரங்களை செய்தீர்கள். எல்லா வற்றையும் விட என் அகக்கண்ணைத் திறந்து விட்டீர்கள்'' என்று கூறி அவரது கால்களில் விழுந்து வணங் கினான்.

சிவசாமியும் ''என்ன இது? பெரிய பெரிய வார்த்தைகளெல்லாம் கூறி என்னை சிறியவனாக்குகிறீர்களே'' எனவே நாகப்பனும் தன்னைப் பற்றிய உண்மையைக் கூறி ''நான் இதுவரை விருந்தாளிகளை உபசரிப்பதில் என்னை மிஞ்சியவர் யாருமில்லை என்று எண்ணி இறுமாந்திருந்தேன். விருந்தாளிகளை எப்படி உபசரிப்பது என்று உங்களிடமிருந்தும் உங்கள் குடும்பத்தினரிடமிருந்தும் கற்றுக் கொண்டேன். இனி உங்கள் வழியிலே நானும் நடப்பேன்'' என்றான்.

நாகப்பன் அதன் பிறகு சிவசாமி யிடம் விடை பெற்றுக் கொண்டு தன் ஊருக்கு வந்தான். அவன் தன் வீட் டிற்கு வரும் விருந்தாளிகளிடம் தன் பெருமையை கூறிக் கொண்டிராமல் அவர்கள் மனம் குளிர சிவசாமி செய்து வந்தது போல உபசரித்து வரலானான்.



# மனிதனும் மிருகமும்

ராமநாதன் காசிக்கு நடந்தே சென்றான். வழியில் கேசவன், மாதவன் என்ற உடல் ஊனமுற்ற இருவரைக் கண்டான். இருவருக்கும் உண்ண உணவு கொடுத்துக் கொஞ்சம் பணமும் கொடுத்து விட்டுச் சென்றான். காசியிலிருந்து திரும்பும் போது அவன் கேசவனைக் கண்டான்.

கேசவன் முனிவராகி சிஷ்யர்கள் புடை சூழ உட்கார்ந்திருந்தான். அவன் ராமநாதனைக் கண்டும் அவனைத் தெரிந்து கொண்டது போலக் காட்டிக் கொள்ளவே இல்லை. அவனைப் பாராமலே அலட்சியமாக இருந்தான். ராமநாதனும் அங்கிருந்து கிளம்பி விட்டான்.

அவன் வேறொரு இடத்தில் மாதவனைக் கண்டான். அவன் ராமநாதனைக் கண்டதும் எழுந்து ஓடிவந்து வரவேற்று எல்லாவித உபசரிப்புகளையும் செய்து அவன் அங்கிருந்து கிளம்பும் போது கூடவே கொஞ்ச தூரம் சென்று வழி அனுப்பினான்.

ஊருக்கு வந்த ராமநாதன் ஊர்ப் பிரமுகர்களிடம் கேசவனையும் மாதவனையும் பற்றிக் கூறவே அவ்வூர் கிராம அதிகாரியும் ''மனிதன் ஒரு விசித்திர மிருகமே நாய்க்கு உண வளித்தால் அது நன்றியுடன் உணவளித்தவனைப் பாதுகாக்கிறது. பூனைக்குப் பால் வார்த்தாலோ அது பாலை வார்த்தவன் மடியில் படுத்து தன் உடலின் ரோமத்தைக் கோதிவிடச் செய்கிறது. கேசவன் பூனையைப் போன்றவன். மாதவன் நாயைப் போன்றவன். மனிதனை மிருகமென அவனது செய்கைகளால் அறிந்து விடலாம்'' என்றார்.





# மாமன்னர் அசோகர்

மகத நாட்டுத்தலைநகர்பலபூங்காக்களையும் பழ மரங்களையும் கொண்ட நகரம். மக்கள் இயற்கையைப் பெரிதும் விரும்பியதால் நகர வீதிகளின் இரு புறங்களிலும் நிழல்களையும் பழங்களையும் தரும் மரங்களை நட்டு வளர்த்தனர். நகரில் எங்கும் மலர்களின் நறுமணமே வீசியது. இதன் காரணமாக நகரின் ஒரு பகுதிக்கு மலர்புரம் எனப் பொருள் தரும் குசுமபுரம் என்ற பெயரை வைத்தார்கள். இங்கு பாடலி என்ற வகை மலர்கள் ஏராளமாகக் கிடைத்ததால் இதற்குப் பாடலிபுத்திரம் எனவும் பெயரிட்டார்கள்.

கங்கையும் சோனும் இங்கு ஒன்று சேரும் இரு நதிகள். இவை ஒன்று சேரும் இடத்தில்தான் சுமார் இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்கு முன்பு அஜாதசத்துரு என்ற மன்னன் ஒரு கோட்டையைக் கட்டினான். அதற்கு இருநூறு ஆண்டுகளுக்குப் பின் சந்திரகுப்தன் என்ற மன்னன் அக்கோட்டையை விரிவுபடுத்தி பலப்படுத்தினான். அப்பெரிய கோட்டையில் ஐநூறு கோபுரங்களும் அறுபத்து நான்கு நுழைவாசல்களும் இருந்தன.

நந்தவம்சத்து மன்னர்கள் மகதத்தை ஆண்டு வந்தார்கள். தனநந்த மன்னனை சந்திரகுப்தன் எதிர்த்தான். இளம் பிராயத்திலிருந்த அவனையும் அவனது தாயையும் நந்தவம்சத்தினர் அவமதித்தார்கள். சந்திரகுப்தனைப் பிடித்து இழுத்து வருமாறு நந்த மன்னன் கட்டளை இட்டான். ஆனால் சந்திரகுப்தன் அரசாங்க வீரர்களுக்கு அகப்படாமல் நகரிலிருந்து தப்பி வெளியேறினான்.



அப்போது உலக நாடுகளை வெல்லும் ஆசையோடு கிரேக்க மன்னன் அலெக்ஜாண்டர் இந்தியாவின் மீது படை எடுத்து வந்திருந்தான். சந்திர குப்தன் சற்றும் அஞ்சாமல் அலெக் ஜாண்டர் முன் போய் நின்று அவனது படை எடுப்பை எதிர்த்துக் கூறி கேலி செய்தான். அவனைப் பிடிக்குமாறு அலெக்ஜாண்டர் தன் வீரர்களுக்குக் கட்டளை இட்டான். அப்போதும் சந்திரகுப்தன் அவ்வீரர்களிடம் அகப் படாமல் ஓடி ஒரு குதிரை மீது ஏறித் தப்பி ஓடி விட்டான்.

உணர்ச்சி வசப்பட்டுத் துடுக்குத் தனமாகத் திரிந்த சந்திரகுப்தன் மகத நாட்டின் சிம்மாசனத்தில் அமர்ந்தது ஒரு அற்புதக்கதை. அவனுக்கு சாணக் கியர் என்ற ஒரு பண்டிதரின் உதவி கிடைத்தது. சாணக்கியரும் தனநந்த மன்னனிடம் அவமானப்பட்டவரே. அவர் நந்த வம்சத்தையே பூண்டோடு ஒழிப்பதாகச் சபதம் செய்து விட்டு நகரை விட்டு வெளியேறினார். அப் போது அவர் இளைஞனான சந்திர குப்தனைக் கண்டார். இருவரது குறிக் கோளும் நந்த வம்சத்தை ஒழிப்பதே.

காட்டில் ஆட்களைத் திரட்டி ராணு வப் பயிற்சி அளித்து அந்தப் படை கொண்டு அவர்கள் மகதத் தலைநகரை திடீரென்று தாக்கினார்கள். அப்போது தனநந்தனுக்கு மக்கள் ஆதரவும் இருக்கவில்லை. அதனால் அவர்கள் எளிதில் அவனை நாட்டிலிருந்து விரட்டி ஆட்சியைக் கைப்பற்றினார் கள். சந்திரகுப்தன் மன்னனாக அரியா சனத்தில் அமர்ந்தான். சாணக்கியர் அவனது அமைச்சரானார். தன் தாயை நந்த வம்சத்தவர் அவமானப்படுத்தி யதற்காகச் சந்திரகுப்தன் தன் தாய் முராவின் பெயரில் மௌரிய வம்சத் தைத் துவக்கினான்.

இச்சமயம் அலெக்ஜாண்டர் இறக் கவே அவன் கைப்பற்றிய இந்தியப் பகுதியின் ஆட்சிப் பொறுப்பு செல் யூகஸ் என்ற படைத் தலைவனிடம் இருந்தது சந்திரகுப்தன் அப்பகுதியை மீட்கத் தன் படையோடு அங்கு சென் றான். செல்யூகஸ் தன் படைகளோடு சந்திரகுப்தனின் படைகளை எதிர்த் தான். ஆனால் கிரேக்கப் படை தோல் வியைத்தான் தழுவியது. செல்யூகஸ் சந்திரகுப்தனோடு சமாதானம் செய்து கொண்டு தன் மகளை அவனுக்கு மணம் செய்து வைத்தான்.

அதன்பின் சந்திரகுப்தன் மாளவம், கூர்ஜ்ஜரம், சௌராஷ்டிரம் ஆகிய நாடு களை வென்று தன் நாட்டைப் பெரி

தாக்கினான். அவன் நல்ல அரசன் என்று பெயர் பெற்று விட்டுச் சென்றான். அவனுக்குப் பிறகு அவனது மைந்தன் பிந்துசாரன் மகத மன்னனானான். தந்தை விட்டுப் போன நாட்டையும், அமைதியையும் இவன் நிலைக்கச் செய்தான்.



பிந்துசாரன் ஆட்சி புரிந்து கொண்டிருந்த போது ஒருநாள் ஒரு அந்தணர் அழகிய பெண்ணொருத்தியை அழைத்துக் கொண்டு பாடலிபுத்திரத்திற்கு வந்தார். அவள் அவரது மகளான சுபத்திரா. அந்தணர் அரண்மனைத் தலைவாசலுக்குப் போய் காவலாளிகளிடம் தாம் மன்னரைப் பார்க்க விரும்புவதாகத் தெரிவித்தார்.

அவர்கள் அந்த அந்தணரையும் அவர் பக்கத்தில் நின்ற பெண்ணையும் உற்றுப் பார்த்தார்கள். அப்பெண்ணின் அழகும் கம்பீரமும் அவள் உயர் குடும்பத்தில் பிறந்தவளாக இருப்பாளோ என்ற எண்ணத்தை அவர்களுக்கு உண்டாக்கியது. அப்போது ஒருவன் அந்தணரிடம் ''நீங்கள் மன்னரை எதற்காகப் பார்க்க விரும்புகிறீர்கள்?'' என்று கேட்டான். அவரோ ''அது பரம ரகசியம். அதை அவரிடம் மட்டும்தான் கூறமுடியும்'' என்றார்.

அப்போது திடீரெனக் குதிரைக் குளம்புகளின் ஒலி கேட்டது. யாரோ அரண்மனையிலிருந்து வந்து கொண்டிருந்தார். காவலாளிகள் ''எல்லோரும் ஓரமாக ஒதுங்கி நில்லுங்கள்'' என்று குரல் கொடுத்தார்கள். ஒரு காவலாளி அந்தணரைப் பிடித்து ஒருபுறமாகத் தள்ளினான்.

அந்தணர் தம் பின்னால் நின்ற தம் மகளின் மீது போய் விழ அவள் தரை மீது விழுந்து விட்டாள். அப்போது குதிரை மீது வந்த பிந்துசாரன் சட்டெனக் குதிரையை நிறுத்திக் கீழே விழுந்து கிடந்த பெண்ணருகே சென்று பார்த்தான். அப்போது அந்தணர் எழுந்து நடு நடுங்கும் குரலில் ''அரசே! தங்களைக் காணவே வந்தோம். எதிர்பாராத விதமாக இது நடந்து இந்த நிலையில் சந்திக்கும் படி ஆயிற்று'' என்றார்.

பிந்துசாரனும் ''என்னை நீங்கள் ஏன் பார்க்க விரும்புகிறீர்கள்?'' எனக் கேட்கவே அந்தணரும் ''அதை நான் தங்களிடம் ரகசியமாகக் கூற வேண்டும்'' என்று பணிவுடன் கூறினார். அதே சமயம் கீழே விழுந்த பெண் எழுந்து நின்று மன்னரை வணங்கினாள். எளிய உடையில் இருந்தாலும் அவளது கம்பீரத் தோற்றமும் அழகும்

அவனை மலைக்க வைத்தன. அவன் உடனே அந்தணரையும் அந்தப் பெண்ணையும் தன்பின் வரச்சொல்லி அரண்மனைக்கு நடந்து சென்றான்.

மன்னன் அவர்களை ஒரு பெரிய அறைக்குள் அழைத்துப் போய் ''சரி நீங்கள் என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?'' என்று கேட்டான். அந்தணரும் மன்னனை வணங்கி ''நான் கூறுவது சரியில்லை என்றால் என்னை மன்னியுங்கள். நான் விதியின் கைப் பொம்மை. அது ஆட்டி வைக்கிறபடித் தான் ஆடுகிறேன். இவள் என் மகள். இவள் குழந்தையாக இருந்த போது என் வீட்டிற்கு ஒரு யோகி வந்தார். அவர் அப்போது இவளை ஆசீர்வதித்து இவள் ஒரு மகாராணியாவாள் என்று கூறிவிட்டுச் சென்றார். ஆனால் நான் அவர் கூறியதைப் பொருட்படுத்தவில்லை. இவள் விவாக வயதை அடைந்ததும் இவளுக்கு ஏற்ற வரனைத் தேடலானேன். இவளது ஜாதகத்தைப் பார்த்தவர்களெல்லாம் இவள் மகாராணியாகத்தான் ஆவாள் என்று கூறினார்கள்'' என்று கூறி நிறுத்தினார்.

பிந்துசாரனும் ஆச்சரியப்பட்டு அந்தப் பெண்ணைப் பார்த்தான். அவள் வெட்கப்பட்டு தலை குனிந்து நின்றாள். அந்தணர் அப்போது ''அரசே! எனக்குத் தெரிந்த மன்னர் நீங்கள் ஒருவரே. அதனால்தான் தங்களைக் காண வந்தேன். விதி ஒரு விதமாய் விளையாடி தங்களை தரிசிக்கும் படிச் செய்தது. எனவே என் மகளைத் தங்களுக்கு அர்ப்பணிக்கின்றேன். ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்று வேண்டினார்.

பிந்துசாரனோ ''எனக்கு இப்



போது பல மனைவிகள் இருக்கிறார்கள். உங்கள் மகளை நான் மணந்து கொண்டாலும் அவள்தான் மகாராணி யாவாள் என்பது என்ன நிச்சயம்?'' என்றான். அந்தணரும் ''அது பற்றி நான் கவலைப்படவில்லை. எல்லாம் விதிப்படித்தான் நடக்கும்'' என்றார். மன்னனும் அந்தப் பெண்ணை மீண்டும் ஒருமுறை பார்த்து விட்டு ஒரு காவலாளியை அழைத்து ''நீ போய் அந்தப்புரத் தலைமைப் பணிப் பெண்ணை அழைத்து வா'' என்று கட்டளை இட்டான்.

தலைமைப் பணிப்பெண் வந்ததும் மன்னன் அவளிடம் ''நான் திரும்பி வரும் வரை நீ இந்தப் பெண்ணை நம் அந்தப்புரத்தில் இருக்க வைத்து இவளை மரியாதையுடன் நடத்தி ஒரு குறையும் இல்லாமல் பார்த்துக்



கொள்'' என்று கூறி வேட்டைக்குக் கிளம்பிச் சென்றான்.

தலைமைப் பணிப்பெண் அந்தப் பெண்ணைத் தன்னோடு வரும்படி அழைக்கவே, அவள் தன் தந்தையைப் பார்த்து கண் கலங்கவே அந்தணரும் ''மகளே! என் கடமை முடிந்து விட்டது. உன்னை எந்த விதி இங்கே கொண்டு வந்து விட்டதோ அந்த விதி தான் உன்னைக் காப்பாற்றும். நீ சற்றும் கவலைப்படாதே'' என்று கூறி விட்டுத் தம் கண்களில் ததும்பிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டு அங்கிருந்து சென்றார்.

தன் தந்தை போவதை சுபத்திரா கற்சிலை போல நின்று பார்த்துக் கொண்டிருந்தாள். தலைமைப் பணிப் பெண் அவளைத் தொட்டு அரண்மனை அந்தப்புரத்திற்குப் போகலாம் என்று சொன்ன போதுதான் அவளுக்குத் தன் நினைவு வந்தது. அந்தப்புரத்துள் சுபத்திரா அடி எடுத்து வைத்ததுமே அங்கு ஒரே கொந்தளிப்பு ஏற்பட்டது. ராணிகளும் பணிப் பெண்களும் காவலாளிகளும் அவளைப் பற்றித் தமக்குள் பேசிக் கொள்ளலானார்கள்.

ஒரு பணிப் பெண் ''இவளது அழகைப் பார்த்தால் கிராமத்தில் வசிக்கும் ஒரு ஏழை அந்தணரின் மகளாகத் தெரியவில்லையே. ஏதோ அரச குடும்பத்தில் பிறந்தவள் போலத் தென்படுகிறாளே'' என்றாள். மற்றொரு பணிப் பெண்ணோ ''மன்னர் மட்டும் இந்த அழகிய இளம் பெண்ணை மணந்து கொண்டு விட்டால் மற்ற ராணிகளை ஏறெடுத்தும் பார்க்க மாட்டார்'' என்றாள். இப்படி அவர்கள் பேசிக் கொண்டதை மறைந்திருந்து மூன்று ராணிகள் கேட்டு விட்டனர். அவர்கள் சுபத்திராவின் மீது பொறாமை கொண்டார்கள்.

தலைமைப் பணிப்பெண் சுபத்திராவிற்கு ஒரு பெரிய அறையைக் கொடுத்ததோடு நல்ல ஆடைகளையும் கொடுத்து வேளாவேளைக்கு உணவையும் அளித்து வந்தாள். வேட்டைக்குப் போன பிந்துசாரன் தன் நாட்டின் எல்லைப்புறத்தில் சில சிற்றரசர்கள் கலவரத்தைத் தூண்டி விட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்று கேள்விப்பட்டு அவர்களை அடக்கத் தன் படையோடு சென்றான். கலகத்தை அடக்கித் தலை நகருக்குத் திரும்பி வர அவனுக்கு இரண்டு மாதங்கள் பிடித்தன.

மன்னர் திரும்பி வரும் வரை தலைமைப் பணிப்பெண் சுபத்திராவை

நன்கு கவனித்துக் கொண்டுதான் வந்தாள். ஆனால் மன்னன் திரும்பி வந்த பின் சுபத்திராவைப் பற்றி எதுவுமே கேட்காததால் அப்பணிப் பெண் மன்னர் சுபத்திராவை அடியோடு மறந்தேபோய்விட்டார்எனத் தெரிந்து கொண்டாள்.

பொறமைகாரிகளான மூன்று ராணிகளோ மன்னன் சுபத்திராவை மணந்து கொண்டு விட்டால் தங்களைத் திரும்பிக் கூடப் பார்க்க மாட்டாரே என்று கவலைப்பட்டார்கள். இதற்காக அவர்கள் மந்திரவாதிகளை நாடி மந்திரம் போட்டு மன்னன் சுபத்திராவை மறக்கும்படிச் செய்து விடச் சொன்னார்கள். அந்த ரர்ணிகளின் தூண்டுதலின் பேரில் தலைமைப் பணிப்பெண்ணும் சுபத்திராவை அலட்சியப் படுத்தியதோடு தொல்லைகளையும் கொடுக்கலானாள்.



ராணிகள் சுபத்திராவை ஒரு வேலைக்காரியிலும் கேவலமாக நடத்தலானார்கள். பல இழிவான வேலைகளை எல்லாம் அவளைச் செய்ய வைத்தார்கள். எந்த வேலையையும் அவள் சரியாகச் செய்யவில்லை என்று அவர்கள் கூறி கண்டபடி திட்டி அவமானப்படுத்தினார்கள். இதையெல்லாம் சுபத்திரா சகித்துக் கொண்டாளேயொழிய யாரிடமும் போய் குறை கூறி முறையிடவில்லை. இப்படியாக இரண்டு வருடங்கள் கழிந்தன.

ஒருநாள் சூரியோதயம் ஆகும் போது பிந்துசாரன் அரண்மனைப் பூங்காவில் உலாவிக் கொண்டிருந்தான். அவன் புல் தரை மீது நடந்து கொண்டிருக்கையில் அவனது காலில் ஒரு முள் தைத்து விட்டது. அவன் அருகே இருந்த ஒரு ஆசனத்தில் அமர்ந்து கொண்டு கைகளைப் பிசைந்தவாறே என்ன செய்வதென யோசித்துக் கொண்டிருந்தான். அப்போது பூங்காவிலிருந்து ஒரு காவலாளி ஓடோடி வந்தான். மன்னன் அவனிடம் உடனே அரண்மனை நாவிதனை அழைத்து வரச் சொன்னான். அக்காலத்தில் அறுவை வைத்தியம், முள் எடுப்பது போன்றவற்றைச் செய்வதெல்லாம் நாவிதர்களே.

காவலாளி அவனை அழைத்து வர ஓடினான். அதற்குச் சற்று நேரம் பிடிக்கும். அவன் அரண்மனையிலிருந்து சற்று தூரத்தில் இருந்தான். காவலாளி போகும் போது எதிரே சுபத்திரா வந்தாள். அவளைக் கண்ட அவன் "ஏய்

பெண்ணே! அரசர் காலில் முள் குத்தி விட்டது. நீ போய் அதை எடுக்க முடியுமா என்று பார்'' என்று கூறிக் கொண்டே ஓடினான்.

சுபத்திராவும் விரைவாக மன்னன் உட்கார்ந்திருந்த இடத்திற்குச் சென்றாள். அவரது காலைப் பிடித்து அமுக்கி அதில் குத்தி இருந்த முள்ளைச் சட்டென எடுத்துத் தூர எறிந்தாள். மன்னனின் கால்வலி நின்றது. அப்போது அவன் சுபத்திராவைப் பார்த்து ''யாரம்மா நீ? நான் உன்னைப் பார்த்ததே இல்லையே'' என்று ஆச்சரியப்பட்டவாறே கேட்டான்.

சுபத்திரா பதில் எதுவும் கூறவில்லை ஆனால் அவளது கண்களிலிருந்து கண்ணீர் வடியலாயிற்று. அது கண்டு மன்னன் மெதுவாக ''நீ இங்கு எவ்வளவு காலமாக இருக்கிறாய்?'' என்று நயத்துடன் கேட்டான். அவளும் ''என் தந்தை என்னை உங்களிடம் ஒப்படைத்த நாளிலிருந்து இங்கே இருக்கிறேன்'' என்று பதிலளித்தாள். தட்டுத் தடுமாறி அவளது வாயிலிருந்து இந்த வார்த்தைகள் வெளி வந்தன.

மன்னன் அவளைக் கூர்ந்து கவனித்தான். அப்போதுதான் அவளது தந்தையான அந்தணர் அவளை அவனிடம் ஒப்படைத்துச் சென்றது அவன் நினைவிற்கு வந்தது. அந்தத் தலைமைப் பணிப் பெண் ஏன் இவ்விஷயத்தைத் தன் கவனத்திற்குக் கொண்டு வரவில்லை என்று கோபம் கோபமாக வந்தது. அதனால் அடுத்த விநாடியே அவன் தன் ஞாபக மறதியை எண்ணி வருந்தினான். தான் செய்த தவறுக்குப் பிறரை நொந்து கொள்வதில் பயனில்லை என நினைத்து அவன் சுபத்திராவிடம் ''சரி. தவறென்னவோ நடந்து போயிற்று. உனக்கு இழைக்கப் பட்ட அநீதி இப்போதே ஒழிய வேண்டும். எனவே இன்று மாலை சூரியன் மறைவதற்குள் நான் உன்னைத் திருமணம் செய்து கொள்கிறேன்'' என்று கூறினான்.

உடனே அவன் அமைச்சர்களையும் புரோகிதர்களையும் அழைத்து வரச் சொல்லி அவர்களிடம் எல்லா விவரங்களைக் கூறி திருமணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்யச் சொன்னான்.

**(தொடரும்)**





# சக்தி இல்லையா?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! நீ இந்த பயங்கர நள்ளிரவில் இப்படிச் சிரமப்படுவது ஏன்? இதைக் காணக் காண எனக்கு சிரிப்புத்தான் வருகிறது. மன்னர்களிடம் மந்திர தந்திரங்கள் தெரிந்த மாயா ஜால வித்தைக்காரர்கள் பலர் இருப்பது உண்டு. அவர்கள் நம் அற்புத சக்திகளை அவ்வப்போது காட்டிக் கொண்டும் இருப்பார்கள். சில சமயங்களில் இவர்கள் தம் சக்தியைக் காட்ட முடியாத நிலையில் இருப்பதுவும் உண்டு. அப்படிப்பட்ட மாதவசேனன் என்பவனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல

## வேதாளம் சொல்லும் கதை



ஆரம்பித்தது.

மஞ்சபுரம் என்ற ஊரில் மாதவ சேனன் என்ற பணக்காரன் இருந்தான். அவன் தாராள மனம் படைத்தவன். எல்லோருக்கும் உதவும் பரோபகாரி. ஆனால் அவனுக்குத் தாய் தந்தை யரோ உற்றார் உறவினர் என்றோ யாரும் இருக்கவில்லை. அவன் தனி யாகவே தன் பெரிய வீட்டில் இருந்து வந்தான்.

அவனது அடுத்த வீட்டுக்காரன் சூர சேனன். அவன் பரம ஏழை. ஒரு சிறு வீடுதான் அவனுடையது. அவன் மாதவசேனனுக்கு நேர் எதிரான குணம் படைத்தவன். பிறர் நன்கு வாழ்வதைக் காணச் சகியாத பொறா மைக்காரன். பொய் புரட்டு ஏமாற்று வேலைகளைச் செய்து ஊராரிடம் போக்கிரி என்றும் துஷ்டன் என்றும் பெயர் வாங்கிக் கொண்டவன். அவ னுக்கு மாதவ சேனனின் செல்வ நிலை யும், பேரும் புகழும் கொண்டு எல் லோருக்கும் உதவி அவர்களது அன் பைப் பெற்று வந்தது வயிறெரிச்சலாக இருந்தது.

அதனால் அவன் மாதவசேனனைப் பற்றிக் குறை கூறலானான். மாதவ சேனன் நற்செயல்களெல்லாம் வெறும் பகட்டுக்காக என்றும் தன்னை எல்லோர் முன்னும் சிறுமைப்படுத் திக் காட்டவே மாதவசேனன் தானதர் மம், உபகாரம் என்றெல்லாம் செய்து வருகிறான் என்றும் சூரசேனன் கூறித் திரிந்து வந்தான்.

ஒருநாள் அவன் அவ்வூர் கிராம அதிகாரியிடம் போய் "என் குடும்பம் பெரியது. அதனால் எனக்குப் பல பிரச்னைகள். எனக்கும் உறவினரோ குடும்பமோ இல்லாது இருந்து பண மும் நிறைய இருந்தால் நானும் மாதவ சேனனைப் போல தான தர்மம் செய் வேன். பிறருக்கு உதவுவேன். ஆனால் நான் அவனைப் போல இல்லாததால் தான் கெட்டவன் எனப் பெயர் பெற் றேன். நான் இந்த நிலைக்கு வரக் காரணம் மாதவசேனனே. ஏன் என் பரிதாப நிலையைக் கண்டு எனக்கு அவன் உதவவில்லை? உண்மையிலே அவனுக்கு நல்ல குணம் இல்லை. என்னை மட்டம் தட்டவே இப்படி பரோபகாரி, தர்மாத்மா, கொடை யாளி என்று வேஷம் போடுகிறான்" என்று ஆத்திரம் தீரப் பொரிந்து தள்ளினான்.

கிராம அதிகாரியும் "நீ சொல்வ தில் கொஞ்சம் உண்மை இருக்கிறது. மாதவசேனன் பக்கத்து வீட்டுக்கார

னான உன் கஷ்டங்களைப் பார்த்து ஏதாவது உதவி செய்திருக்கலாம். ஆனால் அவனிடம் உனக்கு தானம் செய்யச் சொல்லி வற்புறுத்த முடியாதே'' என்றார். சூரசேனனோ அப்போதும் மாதவசேனனை இகழ்ந்து விட்டே சென்றான்.

ஆனால் இந்தச் செய்தி ஊர் முழுவதும், பரவி மாதவசேனன் காதிலும் விழுந்தது. அவன் சற்றும் தாமதியாமல் கிராம அதிகாரியிடம் போய் உடனே ஊர் மக்களை எல்லாம் அங்கு கூட்டும்படிக் கூறினான். கிராம அதிகாரியும் திகைத்தவாறே மாதவசேனன் கூறியபடியே செய்தார். சற்று நேரத்தில் ஊர் மக்கள் யாவரும் வந்து கூடினார்கள். அவர்களில் வீரசேனனும் இருந்தான்.



மாதவசேனன் வீரசேனனைப் பார்த்து ''நீ என் பக்கத்து வீட்டுக்காரன். உனக்கு மாதம் ஒன்றுக்கு வீட்டுச் செலவு என்ன ஆகிறது?'' என்று கேட்டான். அவனும் முன்னூறு வராகன்கள்'' எனவே மாதவசேனன் ''உன் மாத வருமானம் என்ன?'' என்று கேட்கவே அவனும் நூறு வராகன்கள் என்றான். அப்போது மாதவசேனன் ''உனக்குக் கடன் எவ்வளவு உள்ளது?'' என்று கேட்கவே வீரசேனனும் இரண்டாயிரம் வராகன்கள் கடன் வாங்கியுள்ளதாகக் கூறினான்.

அப்போது மாதவசேனன் கிராம அதிகாரியிடம் ''நான் இவனது கடனைத் தீர்க்கிறேன். மாதம் ஆயிரம் வராகன் வருமானம் வரும் சொத்தை உங்களிடம் ஒப்படைக்கிறேன். அதிலிருந்து மாதா மாதம் இவனுக்கு ஐநூறு வராகன்கள் கொடுத்து வாருங்கள். ஆனால் ஒரு நிபந்தனை. இவனது வீட்டுச் செலவு போக மீதப் பணத்தை தானதர்மத்திலும் பிறருக்கு உதவுவதிலும் செலவிட வேண்டும். இதற்கு இவன் சம்மதிக்கிறானா என்று கேளுங்கள்'' என்றான்.

அது கேட்டு கிராம அதிகாரி திகைத்துப் போனார். வீரசேனன் அதற்குச் சம்மதித்தான். அப்போது மாதவசேனன் ''இவன் நான் கெட்டவன் என்றும் என்னால் தான் அப்படி ஆனான் என்றும் உங்களிடமே கூறியிருக்கிறான். எனவே துஷ்டனைக் கண்டால் தூர விலகு என்பதற்கு ஏற்ப நான் இவனை விட்டு விலகி வெகு தூரம் போய் விடத் தீர்மானித்து விட்டேன். என் சொத்துக்களை எல்லாம் தர்மகாரியங்களுக்கு கொடுக்கிறேன். அதை விநியோகிக்கும் பொறுப்பை



யும் நீங்கள் ஏற்க வேண்டும். எனக்கு வாழ்க்கை மீது பிடிப்பு இல்லை. நான் சன்னியாசியாகி விடப் போகிறேன். இமயமலைக்குப் போய்த் தவம் செய்து மோட்சத்தை அடைவேன்'' என்றான். பிறகு அவன் முறைப்படி பத்திரம் எழுதித் தன் சொத்துக்களை கிராம அதிகாரியிடம் ஒப்படைத்து விட்டு அந்த ஊரை விட்டுக் கிளப்பி விட்டான்.

அவன் இமய மலைக்குப் போகும் வழியில் ஒரு அடர்ந்த காட்டை அடைந்தான். அங்கு ஒரு மகரிஷியின் ஆசிரமம் இருப்பது கண்டு அங்கே போய் மகரிஷியைக் கண்டான். அவரிடம் அவன் தன்னை அவரது சீடனாக ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினான். அவரும் அவனிடம் பல கேள்விகள் கேட்டுப் பரீட்சித்துப் பார்த்துவிட்டு ''அப்பனே. அறிவாளியான மனிதன் கடைப்பிடிக்க அவன் முன் இரண்டு வழிகள்தான் உண்டு. ஒன்று தவம் செய்து முக்தி அடைவது மற்றது யோக வித்தையால் அறிவுத் திறன் அடைந்து மக்களுக்கு நன்மை புரிவது. நீ நான் கூறிய இரண்டாவது வழியை மேற்கொள். அதுவே உனக்கு ஏற்றது'' என்றார்.

மாதவசேனனும் ரிஷி கூறியபடி செய்வதாகச் சொல்லி அவரது சீடனானான். இப்படியே இரண்டு ஆண்டுகள் கழிந்தன. அப்போது மகத நாட்டை இந்திரகுப்தன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனது நாட்டில் தொடர்ந்து இரண்டு ஆண்டுகளாக மழை பெய்யாமல் போகவே பெரும் பஞ்சம் ஏற்பட்டது. தண்ணீர் இல்லாது மக்கள் அவதிப்பட்டார்கள்.

மன்னன் தன் மந்திரிகளுடன் என்ன செய்யலாமென் யோசித்துக் கொண்டிருக்கையில் மாதவசேனன் அங்கு வந்தான் அவன் மன்னனிடம் ''அரசே! நான் உங்கள் பிரச்னையைத் தீர்க்க உதவுகிறேன் நீங்களும் எனக்கு பதிலுக்கு ஒரு உதவி செய்ய வேண்டும்'' என்றான். இந்திரகுப்தன் மாதவசேனனின் தோற்றத்தைக் கண்டு அவன் ஒரு யோகி என அறிந்து கொண்டான்.

அப்போது இந்திரகுப்தன் நாட்டில் இரண்டு வருடங்களாக மழை இல்லாமல் கடும் பஞ்சம் ஏற்பட்டிருப்பதைக் கூறினான். அது கேட்டு மாதவசேனன் குறுநகை புரிந்து ''இது மிகச் சுலபமான வேலை. இயற்கையின் வெப்ப தட்ப நிலைகளைக் கட்டுப்படுத்த சில உபாயங்கள் உள்ளன. மந்திரசக்தியால் நான் ஒரு ஹோமம் செய்கிறேன்

அதைச் செய்ய ஏற்ற இடம் சங்கரபுரம் என்ற ஊர். அங்கு செல்ல இப்போதே ஏற்பாடு செய்யுங்கள். அந்த ஹோமம் செய்ய என்னுடன் நீங்கள் மட்டுமே வர வேண்டும். வேறு யாரும் வரக் கூடாது நாம் உங்கள் தேரில் அமர்ந்து விரைவில் சங்கரபுரத்தை அடை வோம்'' என்றான்.

இந்திரகுப்தனும் மாதவசேனன் கூறியபடியே அவனுடன் தேரில் செல்லத் தயாரானான். தேரோட்டி தேரை ஓட்ட அவர்களிருவரும் அதில் அமர்ந்து சென்றார்கள். தேர் பாதி வழி யில் சட்டென நிற்கவே இந்திரகுப்தன் தேரோட்டியிடம் அதன் காரணத்தைக் கேட்டான். தேரோட்டியும் சற்று தூரத் தில் புலிகளின் கூட்டம் வழியில் நின்று கொண்டிருப்பதைச் சுட்டிக் காட்டினான்.

அப்போது மாதவசேனன் தேரி லிருந்து கீழே இறங்கி புலிகள் இருக் கும் இடத்திற்குச் சென்றான். அங்கு பனிரெண்டு புலிகள் இருந்தன. அவை ஒவ்வொன்றாக வந்து மாதவ சேனனை ஒருமுறை சுற்றி வந்து காட்டிற்குள் சென்றுவிட்டன. இதைக் கண்டு இந்திரகுப்தனும் தேரோட்டி யும் ஆச்சரியப்பட்டார்கள்.

தேரோட்டி தேரை ஓட்டிக் கொண்டு போய் மாதவசேனன் நின்ற இடத்தில் நிறுத்தவே மாதவசேனனும் அதில் ஏறிக் கொண்டான். தேர் சங்கர புர எல்லையை அடைந்தது. அப் போது அங்கு ஒரு பெரிய கூட்டமே நின்று கொண்டிருந்தது. தேரோட்டி தேரை நிறுத்தினான். அப்போது ஒரு கிழவர் வந்து மாதவசேனனை ஆச்சரி யத்தோடு பார்த்து ''ஓ! நீங்கள் தாம் அந்த யோகியா?'' என்று கேட்கவே மாதவசேனனும் ''ஆம், நான் ஒரு யோகிதான்'' என்றான்.

அப்போது அக்கிழவர் ''ஒரு யோகி எங்கள் ஊருக்கு வந்து ஒரு ஹோமம் செய்து நாட்டில் மழை பெய்யச் செய்





எல்லா வேலைகளையும் உடல் பலத்தால் செய்து விட முடியாது. சில வேலைகளை மந்திரபலத்தால்தான் செய்ய முடியும். நான் எனக்குத் தெரிந்த மந்திரத்தை உச்சரித்து அதன் பலத்தால் இந்தக் கல்லை ஆறடி உயரத்திற்குப் போய் நிற்கச் செய்கிறேன்'' என்றான்.

பிறகு அவன் அங்கே நின்று சில மந்திரங்களை உச்சரித்தான். அப்போது அந்தக் கல் தரையிலிருந்து பெயர்ந்து வந்து ஆறடி உயரத்திற்குப் போய் நின்றது அதைக் கண்டு யாவரும் மகிழ்ந்த கை தட்டி ஆரவாரம் செய்தார்கள். மாதவசேனனைப் போற்றிப் புகழ்ந்தார்கள். மாதவசேனனும் அங்கு ஹோமத்தை நடத்தினான். அது வரை ஒரு மேகம் கூடத் தென்படாத ஆகாயத்தில் கரு மேகங்கள் சூழ்ந்து வந்தன. சற்று நேரத்தில் அந்த ஊரில் மழை பெய்ய ஆரம்பித்தது.

அந்த மழை அந்த ஊரில் மட்டுமல்ல, அந்த நாடு முழுவதும் பெய்தது. ஏரி, குளங்கள் நிரம்பின. ஆறுகளில் கரைபுரள வெள்ளப் பெருக்கு எடுத்தது. மக்கள் மனம் குளிர்ந்தது. அவர்களுக்கு நீண்ட காலவறட்சிக்குப் பின் நிறையத் தண்ணீர் கிடைத்து விட்டது.

இதைக் கண்ட இந்திரப் குப்தன் பயபக்தியுடன் மாதவசேனனை வணங்கி ''சுவாமி! நீங்கள் எல்லா சக்திகளும் படைத்தவர். மகான். அவதாரபுருஷர். என் நாட்டில் அடி எடுத்து வைத்து என் மக்களின் துயரத்தைப் போக்கடித்தீர்கள். நான் உங்கள் முன் சர்வ சாதாரண மானிடன். நீங்கள் எனக்கு உதவுவதாயும் பிறகு நான்

யப் போகிறார் என்று எங்கள் கிராம தேவதை கிராம அதிகாரியின் கனவில் தோன்றிக் கூறியது. அந்த ஹோமத்தால் நம் நாட்டின் எல்லா ஊர்களிலும் மழை பெய்யும். ஆனால் எங்கள் ஊர் மட்டும் பூகம்பத்தால் அழிந்து விடுமாம். அந்த பூகம்பம் வராமல் தடுக்க எங்களூர் ஆல மரமேடையிலுள்ள ஒரு கல்லை ஆறடி உயரத்திற்குத் தூக்கி விட்டால் போதுமாம். ஊரார் என்ன முயன்றும் அந்தக் கல்லை அசைக்கக் கூட முடியவில்லை'' என்றார்.

அப்போது இந்திரகுப்தன் தான் அதைச்செய்வதாகக் கூறி எல்லோருடனும் ஆலமரத்தடிக்குச் சென்றான். எவ்வளவு முயன்றும் அவனாலும் அக்கல்லை அசைக்க முடியவில்லை. அப்போது மாதவசேனன் ''அரசே!

உங்களுக்கு உதவ வேண்டுமென்றும் கூறினீர்கள். இவ்வளவு சக்தி வாய்ந்த உங்களுக்கு என் உதவியா தேவை? எனக்கு இது ஆச்சரியத்தை அளிக்கிறது'' என்று பணிவுடன் கேட்டு நின்றான்.

அதைக் கேட்ட மாதவசேனன் புன்னகை புரிந்து ''மன்னா! எல்லோருக்கும் எளிதில் தீர்க்க முடியாத ஒரு பிரச்சினை இருக்கத்தான் இருக்கும். நான் இதே நாட்டில் மஞ்சபுரத்தில் வாழ்ந்தவன், பெருஞ்செல்வத்தோடு இருந்தவன். அப்போது என் பக்கத்து வீட்டுக்காரனான சூரசேனன் என்னைப் பற்றி அவதூறு கூறி என் மீது பொறாமை கொண்டான். அது மிகவும் அதிகரிக்கவே நானும் இவ் வாழ்க்கையில் வெறுப்படைந்தேன். வீரசேனன் வசதியாக வாழ ஏற்பாடு செய்து விட்டு என் சொத்துக்களை எல்லாம் தான தர்மக் காரியங்களில் செலவிடச் சொல்லி விட்டு நான் சன்னியாசியாக ஆகக் கிளம்பி விட்டேன். ஒரு மகரிஷியின் சீடனாகி அவரது அறிவுரைப்படி சக்தி வாய்ந்த பல மந்திரங்களைக் கற்று என் ஆசிரமத்திலிருந்து கொண்டு மக்களுக்கு நன்மை புரிவது எனத் தீர்மானித்தேன். ஆனால் அந்த சூரசேனனுக்கு இன்னமும் என் மீது பொறாமையே உள்ளது. நான் மந்திரசக்திகளால் உயர்வது அவனுக்கு எரிச்சலை மூட்டியுள்ளது. அவன் என் ஆசிரமத்திற்கு வந்து அவனுக்கு நான் கற்ற சக்தி வாய்ந்த மந்திரங்களைக் கற்றுக் கொடுக்க வேண்டுமென்று நச்சரித்துத் தொல்லை கொடுத்து வருகிறான். நான் கற்றது போக இன்னும் சக்தி வாய்ந்த பல மந்திரங்களை ஓலைகளில் எழுதி ஆசிரமத்தில் வைத்துப் பாதுகாத்து வருகிறேன். எனவே எனக்கும், அந்த மந்திர ஓலைகளுக்கும் எவ்விதத் தீங்கும் நேர விடாது சூரசேனனைத் தடுக்க ஏற்பாடுகளைச் செய்ய வேண்



டும். இதுதான் நீங்கள் எனக்குச் செய்யும் பதிலுதவி'' என்றான்.

அதைக் கேட்ட இந்திரகுப்தன் ஆச்சரியப்பட்டு ''சுவாமி! தாங்கள் கொடிய புலிகளை அடக்கினீர்கள். கனமான கல்லைத் தரையிலிருந்து ஆறடி உயரம் போய் நிற்கச் செய்தீர்கள். ஹோமம் செய்து மழையை வரவழைத்தீர்கள். இப்படிப்பட்ட உங்களை நான் ஒரு சாதாரண மனிதனிடமிருந்து காக்கவா வேண்டும்?'' உங்களால் இதைச் செய்ய முடியாது என்றா நினைக்கிறீர்கள்? என்று கேட்டான்.

அதைக் கேட்டு மாதவசேனன் ஓரிரண்டு நிமிடங்கள் யோசித்துவிட்டு ''அரசே! நீங்கள் இந்நாட்டு மன்னர். நான் இந்நாட்டில் வாழும் குடிமகன். துஷ்டர்களை ஒடுக்குவது என் வேலைதானா?'' என்றான். இந்திரகுப்தன் மறுவிநாடியே மாதவசேனனின் ஆசிரமத்திற்குப் பாதுகாப்பு அளித்ததோடு வீரசேனனைக் கடுமையாக எச்சரித்து அந்த ஆசிரமத்தின் பக்கம் தலைகாட்டக் கூடாது என்று உத்திரவு போட்டான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! மாதவசேனன் பல அபூர்வ சக்திகளைக் கொண்டிருந்தும் அவனே வீரசேனனைத் தண்டிக்காமல் ஏன் மன்னனின் உதவியைக் கோரினான்? அவன் ஏன் இதைத் தானே செய்யவில்லை? இக்கேள்விக்குச் சரியான பதில் தெரிந்தும் நீ கூறாவிட்டால் உன் தலைவெடித்துச் சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும் ''மாதவசேனனிடம் வீரசேனனை தண்டிக்கும் சக்தி இல்லாமல் போய் விடவில்லை. அவன் சன்னியாசி. தன் சக்தியைத் தனக்காகப் பயன்படுத்திக் கொள்ளக் கூடாது என அவன் நினைத்தான். இதனால் தான் வீரசேனனை தண்டிப்பது சரியல்ல எனக் கருதினான் மேலும் ஒருவனை தண்டிக்கும் பொறுப்பு மன்னனுடையதே என்று மன்னனுக்கும் உணர்த்தினான். அதனால்தான் அவன் மன்னனிடம் அந்த உதவியைக் கேட்டான்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.






# மன்னார் வளைகுடாவும் அதற்கு அப்பாலும்

கருத்து: **மீராநாயர்** ◆ ஓவியர்: **கோப்குமார்**

கன்னியாகுமரியிலிருந்து கடற்கரையோரமாகப் போனால் மன்னார் வளைகுடாவை அடைகிறோம். அங்கு நுழையும் போதே திருச்செந்தூர் என்ற ஊரை அடைகிறோம். இங்கு முருகக் கடவுளின் பெரிய கோவில் கடற்கரையில் உள்ளது முருகனின் ஆறு படை வீடுகளில் இது ஒன்று. மற்ற படைவீடுகளைப் போல இது குன்றின் மேல் அமைந்திருக்கவில்லை. இக் கோவில் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்டதாம். முன்னூறு ஆண்டுகளுக்கு முன் ஒன்பது அடுக்கு கோபுரம் கட்டப்பட்டு இது புதுப்பிக்கப்படடது. இங்கு பக்தர்கள் காவடி எடுத்து வரு கிறார்கள்.

இதற்குச் சில கிலோ மீட்டர் வடக்கே தூத்துக்குடி உள்ளது. இதன் துறைமுகம் இந்தியாவின் பத்தாவது பெரிய துறைமுகமாக 1974 ஜூலை 11ல் அறிவிக்கப்பட்டது. இந்தியாவிலேயே இரு பெரும் துறைமுகங்களைக் கொண்டது தமிழ் நாடுதான். இதுவும் சென்னைத் துறைமுகம் போல செயற்கைத் துறைமுகமே. துறைமுகத்தின் வடக்கிலும் தெற்கிலும் அலைகளைத் தடுக்க இரு நீண்ட சுவர்கள் கட்டப்பட்டுள்ளன வடபுற சுவர் உலகின் இரண்டாவது நீளக் கடல் சுவர். இதன் நீளம் 4096 மீட்டர்

இந்திய முத்துக்கள் பழங் காலத்திலும் பெயர் பெற்றவை. இரண்டாவது நூற்றாண்டில் ரோமிற்கும் மற்ற மேலை நாடுகளுக்கும் அனுப்பப்பட்ட முத்துக்கள் மன்னார் வளைகுடாவில் எடுக்கப்பட்ட வையே. தூத்துக்குடி தற்போதும் முத்து வியாபாரம் செய்து வருகிறது. மேலும் உப்பு, ரசாயண உரம், கனரகநீர், அனல் மின் நிலயத்திற்கு இது பெயர் பெற்றது.

திருச்செந்தூர் முருகன் கோயில்



ராமேஸ்வரம் புனிதத் தீவு நகரம். இது மன்னார் வளைகுடாவின் வட பகுதியில் உள்ளது. இந்துக்கள் நான்கு திசைகளிலுமுள்ள நான்கு புனிதத் தலங்களுக்கு யாத்திரைபோகிறார்கள். வடக்கே பத்திரிநாத், கிழக்கே ஜகன் நாதபுரி, மேற்கே துவாரகை, தெற்கே ராமேஸ்வரம். காசியைப் போல ராமேஸ்வரத்திற்கும் தன் வாழ்நாளில் ஒருமுறையாவது சென்றுவரவேண்டுமென ஒவ்வொரு ஹிந்துவும் எண்ணுகிறார். இத்தீவு இராமாயணத்துடன் தொடர்பு கொண்டதாகக் கருதப்படுகிறது. ராமேஸ்வரம் என்ற பெயர் ராமரால் வந்தது. இராவணனைக் கொன்ற பாவத்தைப் போக்கிக் கொள்ள ராமர் இங்கு சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்ய ஒரு லிங்கத்தைக் கொண்டு வருமாறு ராமர் அனுமாரிடம் கூறினாராம். அனுமாரும் லிங்கத்தைத் தேடிப்போய் வெகு நேரமாகியும் திரும்பி வரவில்லையாம். முகூர்த்த வேளை தவறுகிறதே என்று ராமர் கவலைப்பட சீதா தேவி மணலால் ஒரு லிங்கத்தை உருவாக்கிக் கொடுத்தாளாம். ராமரும் பூஜை செய்து முடித்தாராம்.

லிங்கத்தோடு வந்த அனுமார் அங்குள்ள லிங்கத்தைக் கண்டு திகைத்தார் ராமர் அனுமாரிடம் அந்த லிங்கத்தை எடுத்துவிட்டு அந்த இடத்தில் அவர் கொண்டு வந்த லிங்கத்தை வைக்கும்படிக் கூறி னார். அனுமார் எவ்வளவு முயன்றும் அந்த லிங்கத்தை எடுக்க முடியவில்லை. அப்போது ராமர் அனுமாரிடம் அவர் கொண்டு வந்த லிங்கத்தை அந்த லிங்கத்தின் பக்கம் வைக்கும்படிக் கூறினார். அதற்குத்தான் முதலில் பூஜை எனவும் கூறினார். அதனால் இன்றும் அங்கு காசி விசுவநாத ராமநாத ஸ்வாமி லிங்கத்திற்குப் பூஜை செய்த பிறகே ராமரின் ராமலிங்கத்திற்குப் பூஜை நடக்கிறது.

சேதுபதி வம்ச மன்னர் உதயணர் 15வது நூற்றாண்டில் ராமர் பூஜை செய்த இடத்தில் ராமநாத ஸ்வாமி கோவிலைக் கட்டினார்.



**அனுமார் லிங்கத்தை எடுக்க முயல்கிறார்!**



ராமேஸ்வரம் கோயில்

இக்கோவிலில் 1200 மீ. நீளமுள்ள மண்டபம் ஆயிரம் தூண்களோடு அழகிய சிற்பவேலைப் பாடுடன் கூடி உள்ளது. இது இந்தியாவிலேயே மிக நீளமான ஒரே மண்டபம்.

இந்துக்களோடு சீக்கியர்களும் ராமேஸ்வரத்தைத் தம் புனிதத்தலமாகக் கருதுகிறார்கள். அவர்களது 10வது குருவான குரு கோவிந்தசிங் இங்கு விஜயம் செய்ததே அதன் காரணம். மேலும் இங்கு கடல் வாழ் உயிரினங்களைப் பற்றி ஆராய விஞ்ஞானிகள் வரு கிறார்கள்.



மிகப் பெரிய நீள மண்டபம்

ராமேஸ்வரத்திற்குத் தென்கிழக்கே தனுஷ் கோடி உள்ளது. இது ஸ்ரீலங்காவிற்கு மிக அரு கில் உள்ளது. தனுஷ்கோடி என்றால் ராமரின் வில் என்று பொருளாம். இதன் கடற்கரை வில் போல் வளைந்துள்ளது. இங்குள்ள கோதண்ட ராமர் கோவிலில் ராமர் சீதை, லடசுமணர், அனுமார், விபீஷணர் ஆகியோரின் விக்கிரகங் கள் உள்ளன. இங்குதான் ராவணனின் தம்பி விபீஷணர் ராமரிடம் சரண் புகுந்தாராம்.

ராமேஸ்வரம் தீவை அடுத்து தொடர்ந்து மணல் திட்டுகள் கடலில் தென்படுகின்றன. இது ஆடம்பாலம் எனப்படுகிறது. ராமர் இலங்கைக்குச் செல்ல கடலில் கட்டிய பாலம் இது என்று கருதப்படுகிறது. புவியியல் ஆய்வாளர்கள் இதை இந்தியாவிற்கும் ஸ்ரீலங்காவிற்கும் இருந்த தொடர் நிலப் பகுதியாகக் கருதுகிறார்கள். முப்பது மைல் நீளத்திற்குச் சிதறிக் கிடக்கும் இந்தத் திட்டுகள் கடலில் படகுகளும் கப்பல்களும் செல்லத் தடையாக உள்ளன.

தனுஷ்கோடி மணல் திட்டுகள். இங்கு வளரும் கோரைப்புல் 'ராவணன் தாடி' எனவும் கூறப்படுகிறது.





**தனுஷ்கோடி மணல் திட்டுகள். இங்கு வளரும் கோரைப் புல் 'ராவணன் தாடி' எனவும் கூறப்படுகிறது.**

ராமேஸ்வரத்திலிருந்து பாக் வளைகுடாவைக் கடந்து பாக்ஜலசந்தி வழியாக வங்காள விரி குடாவை அடைகிறோம். நாம் கோடிக் கரையை அடையும் போது பல நாரைகளையும் கொக்குகளையும் காண்கிறோம். இவை போகப் பல விதப் பறவைகள் வந்து சேரும் சரணாலயமாக இது விளங்குகிறது.



அகத்திய முனிவர் சிவபிரானிடமும் பார்வதியிடமும் ஆசி பெறும் காட்சி.

கோடிக்கரைக்கு அருகிலுள்ள வேதாரணியம் பாடல் பெற்ற தலம். வரலாற்றுப் புகழ் பெற்ற இடமும் கூட. இங்கு விடுதலைப் போரின் போது ராஜாஜி உப்பு சத்தியாக்கிரகத்தை நடத்தினார். பிற்காலத்தில் இந்த மூதறிஞர் இந்திய கவர்ஜெனரலானார். வேதாரணியக் கோவிலில் சிவபிரானும் பார்வதியும் திருமண ஆடைகளுடன் காட்சி அளிக்கிறார்கள். இந்தக் கோலத்தில் அவர்கள் அகத்திய முனிவருக்குக் காட்சி அளித்தார்களாம். அகத்தியர் அவர்களது திருமணம் கைலாயத்தில் நடந்தபோது அங்கு இருக்கவில்லையாம். இதன் காரணமாக வேதாரணியம் 'தென்கைலாசம்' என அழைக்கப்படுகிறது.

**கோடிக்கரை**





# ராட்சஸனும் மனிதனே!

வீரபுர மன்னன் விஜயசேனன் ஆட்சியில் கவனம் செலுத்தாததால் அவனது அமைச்சர்கள் தாம் நாட்டை ஆண்டு வந்தனர். இதன் காரணமாக நாட்டில் அதிகாரிகள் லஞ்சம் வாங்குவதையே குறிக்கோளாகக் கொண்டு விட்டனர். அந்நாட்டில் சங்கமித்திரன் என்ற இளைஞன் இருந்தான். அவன் கஷ்டப்பட்டுப் படித்ததோடு நில்லாமல் போர்கலையையும் நன்கு பயின்றிருந்தான்.

அவன் அரசாங்கத்தில் உத்தியோகம் பெறும் நோக்கத்தோடு மன்னனைக் காண வந்தான். ஆனால் அவனால் மன்னனைக் காண முடியவில்லை. ஏனெனில் அதிகாரிகள் லஞ்சமாகப் பெருந் தொகையைக் கேட்டார்கள். அதற்கு ஏழையான அவன் எங்கே போவான்?

அவனுக்கு மன்னன் மீதும் அமைச்சர்கள் மீதும் அதிகாரிகள் மீதும் வெறுப்பே ஏற்பட்டது. அதனால் அவன் ஒரு காட்டிற்குப் போய் வாழலானான். காட்டு மிருகங்களை வேட்டையாடித் தனக்கு வேண்டிய உணவை அடைந்தான். அவன் எப்போதும் வில்லும் கையுமாகத் திரிந்து வந்தான். இப்படியே சில ஆண்டுகள் கழிந்தன.

மன்னன் விஜயசேனன் நோய் வாய்ப்பட்டான். வைத்தியர்கள் என்னென்னவோ மருந்துகளைக் கொடுத்தார்கள். ஆனாலும் நோய் போய் விடவில்லை. அப்போது கமலாகரர் என்ற கிழ வைத்தியர் ''அதைக் குணப்படுத்த அமிர்தவல்லி என்ற காட்டு மூலிகைதான் வேண்டும். ஆனால் அது நம் நாட்டில் இல்லை. வெகு தூரம் போய்த் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும். அது கிடைப்பதுதான் சிரமம்'' என்றார்.

அப்போது விஜயசேனனின் மகன் தீரசேனன் கிழ வைத்தியரிடம் ''அம் மூலிகை எப்படி இருக்கும்? எங்கு

—சங்கர. சுவாமிநாதன்—



கிடைக்கும்? இதைச் சொல்லுங்கள். நான் போய் அதை எடுத்து வரு கிறேன்'' என்றான். கிழ வைத்தியரும் அம்மூலிகையின் வடிவையும் அது தண்டகாரன்யத்தில் கிழக்கு மலை யில் உள்ளது என்பதனையும் கூறி னார். தண்டகாரண்யம் மிக பயங் கரக் காடு என்பதை வீரபுர மக்கள் நன்கு அறிந்தவர்களே. தீரசேனனே வேட்டையாட அங்கு போய் கொடிய மிருகங்களையும் மலைப் பாம்பு களையும் கண்டு பயந்து ஓடி வந்தவன் தான்.

அவன் பல மலைவாசிகளை விசா ரித்து காட்டில் வாழும் சங்கமித் திரனைப் பற்றி அறிந்தான். அவன் உடனே வீரர்களை அனுப்பி சங்கமித் திரனை அழைத்து வரச் சொன்னான். சங்கமித்திரனுக்கு தீரசேனன் மிகவும் கொடியவன் என்பது தெரியும். ஆனா லும் அவன் தீரசேனனைக் காண வந்தான். தீரசேனனும் அவனை வர வேற்று ''சங்கமித்திரா! இந்நாட்டு மன்னர் நோய் வாய்ப்பட்டிருப்பதை நீ அறிந்திருப்பாய், அவரது நோயைப் போக்க அமிர்தவல்லி என்ற மூலிகை வேண்டும். அதை எடுத்து வர நான் போகப் போகிறேன். எனக்கு நீ உத வினால் உனக்கு நிறையப் பணம் கொடுக்கிறேன்'' என்றான்.

அது கேட்டு சங்கமித்திரன் ''இள வரசே! பண விஷயம் ஒருபுறம் இருக் கட்டும். நான் பிறருக்கு உதவும் இயல் புடையவன். அதனால் உங்களுக்குக் கட்டாயம் உதவுகிறேன்'' என்றான். மறுநாளே இருவரும் இரு குதிரை களின் மீது அமர்ந்து தண்டகாரண் யத்திற்குள் சென்றனர். சங்கமித்திரன் தான் முன்னால் போய்க் கொண்டிருந் தான். அவன் புதர்களை வெட்டி வழி செய்து கொண்டு செல்ல, பின்னால் தீரசேனன் சென்று கொண்டிருந்தான். இவ்வாறு சங்கமித்திரன் வழி செய்த போது பல பாம்புகள் அங்கிருந்து ஓடின. நான்கு நாட்கள் பயணத்திற்குப் பின் அவர்கள் கிழக்கு மலையை அடைந்தனர்.

சங்கமித்திரன் உற்சாகத்துடன் ''இளவரசே! அமிர்தவல்லி மருந்துச் செடி ஒரு அடி உயரமானதே. அதனால் நம்மால் குதிரைமீதிருந்து கொண்டு அதைப் பார்த்துக் கண்டு பிடிக்க முடி யாது. எனவே நாம் நம் குதிரைகளின் மீதிருந்து கீழே இறங்கித்தான் அதைத் தேட வேண்டும். ஆகையால் நாம் கீழே இறங்கித் தேடுவோம்'' என் றான். தீரசேனனும் குதிரையிலிருந்து

கீழே இறங்கினான். சங்கமித்திரனும் இறங்கி வரவே இருவரும் மூலிகையைத் தேடலானார்கள்.

அந்த இடத்திற்கு மிக அருகிலுள்ள மலைக் குகை ஒன்றில் ரத்தபிரியன் என்ற ராட்சஸன் இருந்தான். அவனது முன்னோர்கள் அக்காட்டை ஆண்டவர்கள். எனவே தன்னை உயர்வாக எண்ணிய அவன் மற்ற ராட்சஸர்களைப் போல மிருகங்களைத் கொன்று தின்பது கேவலம் என நினைத்தான். அதனால் என்றாவது ஒருநாள் ஒரு மனிதனைப் பிடித்துக் கொன்று தின்பதாக சபதம் செய்தான்.

அவன் தன் குகையருகே இரண்டு மனிதர்கள் அலைவதைக் கண்டு ஒரேயடியாக மகிழ்ந்து போனான். எனவே பயங்கரமாகத் கத்தியவாறே அவன் அவர்களை நோக்கி ஓடினான். அவனைப் பார்த்து சங்கமித்திரனும் தீரசேனனும் பயந்து நடு நடுங்கினார்கள். தீரசேனன் தடுமாறியவாறே ''சங்கமித்திரா! இப்போது என்ன செய்வது? அந்த கிழ வைத்தியனின் பேச்சை நம்பி இப்படி ஒரு ஆபத்தில் மாட்டிக் கொண்டு விட்டோமே. இனி நாம் எங்கே உயிர் தப்பப் போகிறோம். அந்தக் கிழ வைத்தியன் என்னைக் கொன்று விட வேண்டுமென்று திட்டமிட்டு என்னை இங்கே போகச் சொல்லி இருக்கிறான்'' என்று புலம்பினான்.

சங்கமித்திரன் அவனைக் கீழே விழாதபடி பிடித்துக் கொண்டு ''இளவரசே! உங்கள் தந்தை ஆட்சி புரியும் விதமும், உங்களது கொடூர குணமும் நாட்டு மக்கள் யாவரும் அறிந்ததே. இந்த ராட்சஸன் மிகவும் கொடூரமான



வன் என்று நான் கேள்விப் பட்டிருக்கிறேன். எனவே இனிக் கடவுள்தாம் நம்மைக் காப்பாற்ற வேண்டுமென்று கை கட்டிக் கொண்டு இருக்க வேண்டாம். உங்கள் கத்தியை எடுத்துக் கொள்ளுங்கள்'' எனக் கூறியவாறே தன் வில்லை எடுத்து அதில் அம்பை வைக்கப் போனான்.

அப்போது ராட்சஸன் அவர்களருகே வந்து வில், அம்புடன் இருந்த சங்கமித்திரனை ஒருகையிலும் தரையில் விழப் போன தீரசேனனை மற்ற கையிலும் தூக்கி எடுத்துக் கொண்டான். பிறகு அவன் ''நான் ஒரு மனிதனைத்தான் சாப்பிட சபதம் செய்தேன், இப்போது இரண்டு மனிதர்கள் கிடைத்திருக்கிறார்கள். இருவரையுமேயா சாப்பிடுவது?'' என்று கூறியவாறே யோசனை செய்யலானான்.

அப்போது சங்கமித்திரன் "ஓ! ராட்சஸர்களில் தலை சிறந்தவரே! நீங்கள் உங்கள் சபதம் பற்றிக் கூறி எப்படிச் செய்வது சரி என்று யோசிப்பது கண்டு நீங்கள் நெறி தவறாதவர் எனத் தெரிந்து கொண்டேன். இதுவே எனக்கு மகிழ்ச்சி அளிக்கிறது. நாங்கள் இங்கு வந்ததற்குக் காரணம் மன்னர் விஜயசேனனின் உயிர் போகாமல் காக்க அமிர்தவல்லி என்ற மூலிகையை எடுத்துச்செல்லத்தான். இவர் இந்த நாட்டின் இளவரசர். அந்த மூலிகை எங்கே இருக்கிறது என்று சொன்னால் அதனை எடுத்துக் கொண்டு இளவரசர் இங்கிருந்து போய் விடுவார். நான் உனக்கு உணவாகிறேன். உன் சபதப்படி ஒரு மனிதனைச் சாப்பிட்டாகிவிட்டது என்ற மன நிறைவு உனக்கு ஏற்படும்" என்றான்.

உடனேயே ராட்சஸன் அவர்களிருவரையும் கீழே இறக்கிவிட்டு "அந்த அமிர்தவல்லி மூலிகை இங்கேதான் இருக்கிறது. நானே அதை எடுத்துக் கொடுக்கிறேன். ஆனால் எனக்கு ஒரு சந்தேகம். இந்த இளவரசன் தன் தந்தைக்காகத் தியாகம் செய்தால் நியாயமே. இந்த இளவரசன் சாதாரணக் குடிமகனான உன்னை பலி கொடுத்து விட்டுப் போவது சரி என்றா கூறுகிறாய்?" என்று கேட்டான்.

மறுநிமிடமே தீரசேனன் கீழே விழுந்து ராட்சஸனின் கால்களைப் பற்றிக் கொண்டு "ராட்சஸரே! நீங்கள் கூறியது என் கண்களைத் திறந்து விட்டது. என் தந்தை ஆட்சியை கவனிப்பதே இல்லை. நான் கொடூரமானவன் என்று பெயர் பெற்று விட்டேன். எனவே நான் உனக்கு பலியாகிறேன் நற்குணங்கள் கொண்ட இந்த சங்கமித்திரன் மூலிகையுடன் இங்கிருந்து செல்லட்டும்" என்று வேண்டினான். இதைக் கேட்ட ராட்சஸன் பலமாகச் சிரித்து "நீங்கள் இருவருமே நற்குணங்கள் கொண்டவர்கள். என்னோடு இருவரும் வாருங்கள். அமிர்தவல்லி மூலிகையை எடுத்துக் கொடுக்கிறேன். என் சபதம் பிறகு என்றாவது நிறைவேறும்" எனக் கூறி அந்த மூலிகையை எடுத்து அவர்களிடம் கொடுத்து அனுப்பினான்.

சங்கமித்திரனும் தீரசேனனும் மூலிகையுடன் தலைநகருக்குச் சந்தோஷத்துடன் சென்றார்கள்.





# பொன்மயமான பொழுதுகள் - 9

## உலகில் நாம் இவற்றை எங்கு காணலாம்?

## கோலாக் கரடிகள்

குட்டி கோலாக் கரடி பிறந்ததும் முதல் ஆறு மாதங்களைத் தன் தாயின் வயிற்றிலுள்ள பையில் கழிக்கிறது. இவை ஆவலாய் உண்பது ஈகாலி படஸ் இலை களைத் தான். இந்தப் பிராணி களை எங்கு காணலாம்?





## கடற்கன்னியின் சிலை

இந்தச் சிறிய கடற்கன்னியின் சிலை அற்புதமாய்க் கதைகளைக் கூறும் ஒருவருடையது. அவர்தான் ஹான்ஸ் கிருஸ்டியன் ஆண்டர்சன். இச்சிலை ஒரு துறைமுகத்தின் நுழை வாயிலில் உள்ளது. அத்துறைமுகம் எது?

## மேடம் டுஸ்ஸாட்டின் மெழுகு அருங்காட்சியகம்

பிரஞ்சு பெண்மணி மேடம் மாரி டுஸ்ஸாட் 1834ல் மெழுகு உருவங்கள் நிறுவிய இந்தப் புகழ் பெற்ற அருங்காட்சியகம் எங்குள்ளது?



## தங்கத் தலைவாசல் பாலம்

உலகிலேயே இந்தத் தங்கத் தலைவாசல் பாலம் மிகவும் அழகானது. 1220 மீட்டர் நீளமுள்ள இப்பாலம் 1937ல் கட்டப்பட்டது. இது எங்கு உள்ளது?





# மூளைக்கு வேலை!

1. இரு அராபியர்கள் தாம் சாப்பிட ரொட்டிகளு டன் சென்று கொண்டிருந்தனர். ஒருவரிடம் மூன்று ரொட்டிகளும் மற்றவரிடம் ஐந்து ரொட்டிகளும் இருந்தன. வழியில் அவர்களை பசியோடு இருந்த ஒரு பயணி சந்தித்தார். இரு அராபியர்கள் அந்தப் பயணியை தம்மோடு சேர்ந்து சாப்பிட அழைத்தார்கள் மூவரும் எட்டு ரொட்டிகளைச் சமமாகப் பங்கிட்டு சாப் பிட்டார்கள். பயணி அவர் களிடம் எட்டு வெள்ளி நாணயங்களைக் கொடுத்துவிட்டுப போனார். அவர்கள் அப்பணத்தை சரியாக எப்படிப் பிரித்து எடுத்துக் கொள்ள வேண்டும்?





2. மூன்று பருமனானவர்கள் ஒரு சிறு குடைக்குள் அடங்கி இருந்தும் யாருமே நனையவில்லை. ஏன்?

3. ஜெர்மானியர்கள் வாழைப்பழத் தோல்களை என்ன செய்கிறார்கள்?

4. ஒரு பஸ் காலியாகக் கிளம்பியது. அடுத்த ஸ்டாப்பில் 16 பயணிகள் அதில் ஏறினார்கள். அடுத்த ஸ்டாப்பில் ஏழு பேர் இறங்க மூன்று பேர்கள் ஏறினார்கள். அடுத்த ஸ்டாப்பில் ஒன்பது பயணிகள் ஏற, மூன்று பேர் இறங்கினார்கள் அதற்கு அடுத்த ஸ்டாப்பில் ஐந்து பயணிகள் ஏற மூவர் இறங்கினர். இப்போது பஸ் எத்தனை ஸ்டாப்களில் நின்றது?

5. மூன்று கைக்குட்டைகள் ஒன்றோடொன்று முடி போடப்பட்டன. அவற்றில் இரண்டு வெள்ளை ஒன்று சிவப்பு. இரண்டு வெள்ளைக் கைக்குட்டைகள் முதலில் ஒன்றாகச் சேர்க்கபபட்டு சிவப்புக் கைக் குட்டை இரண்டாவது வெள்ளைக் கைக்குட்டை யோடு முடி போடப்பட்டது. இப்போது ஒரு வெள்ளைக் கைக்குட்டைக்கும் சிவப்புக் கைக் குடடைக்கும் மத்தியில் ஒரு கைக்குட்டை உள்ளது. இப்போது சிவபபு கைக்குட்டையை அதன் முடிச்சை அவிழ்க்காமல் இரண்டு வெள்ளைக் கைக்குட்டை களுக்கிடையே வர என்ன செய்வீர்கள்?



6. ஒலித்தடையைத் தகர்க்க முதலில் மனிதன் உருவாக்கிய சாதனம் எது?

7 ஒரு விநாடிக்கு முன் நிரப்பட்ட ஒரு கண்ணாடி டம்ளர் தண்ணீரை நான் மேஜை மீது தட்டியும் அதிலிருந்து ஒரு சொட்டு நீர் கூட மேஜை விரிப்பின் மீது விழுந்து அதை நனைக்கவில்லை. ஏன்?

8. போரில் நாசமடைந்த ஒரு கிராமத்தில் சிலர் தம் ஊரில் ஆளுக்கு ஒரு லிட்டர் வீதம் 13 நாட்களுக்கே தண்ணீர் இருப்பதைக் கண்டனர். ஐந்தாவது நாள் எப்படியோ கொஞ்சம் தண்ணீர் கொட்டிப்போயிற்று. அன்று ஒரு மனிதனும் இறந்து விட்டான். அன்று அவன் தனக்கான நீரைக் குடித்தும்விட்டான் மீத முள்ள நீர் எஞ்சி இருந்தவர்களுக்கு 13 நாட்களுக்குப் போதியது என்றால் எவ்வளவு நீர் கொட்டிப் போயிற்று?



9. பலவந்த சர்மதாம் பயணம் செய்த பஸ் திடீரென நின்றபோது தூக்கி எறியப்பட்டார். இதனால் அவரது வலது கை காயமுற்றது அவர் நீதிமன்றத்தில் பஸ் கம்பெனி மீது நஷ்ட ஈடு பத்து லட்சம் கொடுக்க வேண்டுமென வழக்கு தொடுத்தார். பஸ் கம்பெனி வக்கீல் அவரிடம் ''உங்களால் எவ்வளவு உயரம் உம் கையைத் தூக்க முடியும் என்று காட்டுங்கள்'' என்றார். சர்மாதம் தோள்பட்டை உயரத்திற்குக் கையை உயர்த்தினார் அடுத்து வக்கீல் ''விபத்திற்கு முன் நீர் உமது கையை எவ்வளவு உயரத் உயர்த்த முடிந்தது எனக் காட்டுங்கள்'' எனவே சர்மாவும் தம் தலைக்கு மேல் கையை உயர்த்திக் காட்டினார்.

அப்போது பஸ் கம்பெனி வக்கீல் ''இந்த சர்மா கூறுவது பொய் என்பது இதனால் தெரிந்து விட்டது'' என்று கூறினார். ஆனால் நீதிபதி அந்த வக்கீல் கூறியதை ஏற்க மறுத்தார். அது ஏன்?



## *பொன்மயமான பொழுதுகள் - 8ன் விடைகள்:*

1. ராஜஸ்தானின் ரானக் பூரிலுள்ள ஆதிநாதர் ஆலயம். 2. கஷ்மீரிலுள்ள அமர்நாத் 3. ஈஸ்டர் தீவின் பழங்குடி மக்கள்.

**செய்து பாருங்கள்!**

## உடலில் உருள்தல்



ஒரு பந்தால் ஒரு வேடிக்கை காட்டலாம்.

(அ) ஒரு டென்னிஸ் பந்தைக் கையில் எடுத்துக் கொள்ளவும்.

(ஆ) இரண்டு கைகளை நேராக நீட்டி உடல் உருவத்தை 'T' வடிவில் இருக்கச் செய்யவும்.

(இ) இப்போது பந்தை வலது கையிலிருந்து மார்பின் மீது போகச் செய்து இடது கை நுனிவரை உருளச் செய்யலாம். மீண்டும் இடது கையிலிருந்து வலது கைக்கு இதே வழியில் வரச் செய்யலாம். செய்து பாருங்கள்.



## ஒரு 'டெட்டி பேர்' சிலை

1. ஒரு பழைய 'டெட்டி பேர்' பொம்மையை நெட்டுக்குத்தாக இரு சமபாகங்கள் ஆக்குங்கள்.
2. பிளாஸ்டர் ஆஃப் பாரிஸில் தண்ணீர் விட்டுப பிசைந்து கொள்ளவும்.
3. வெட்டப்படட 'டெட்டிபேர்' இரண்டு பாகங்களுள் இந்தப் பிளாஸ்டர் ஆஃப பாரிஸ் கலவையைத் திணிக்கவும். பிறகு இரு பகுதிகளையும் சேர்த்து வைத்து ஒரு நூலால் கட்டவும்.
4. பிளாஸ்டர் ஆஃப் பாரிஸ் இறுகி கெட்டியாகும்வரை அப்படியே வைத்திருக்கவும்.
5. இப்போது வெட்டப்பட்ட இரு டெட்டிபேர் பகுதிகளை எடுத்துவிட்டால் பிளாஸ்டர் ஆஃப் பாரிஸின் டெட்டிபேர் சிலை கிடைக்கும்.
6. முடிவில் கண்கள், மூக்கு, வாய்ப்பகுதிகளுக்கு வண்ணம் தீட்டுங்கள். இப்போது அழகிய 'டெட்டிபேர்' சிலை கிடைத்துவிட்டது.



# மகாபாரதம்

பாண்டவர்கள் வனவாசத்தை மேற்கொண்டு ஓராண்டு கழிந்த போது அர்ஜுனன் தேவலோகத்திற்குச் சென்றான். அவன் அங்கிருந்து திரும்பி வர ஐந்து ஆண்டுகளாயின. அவன் வந்த பின் பாண்டவர்கள் யாவரும் கந்தமாதனப் பகுதியில் நான்கு ஆண்டுகளைக் கழித்தார்கள். குபேரனின் தயவால் அந்த அழகிய பகுதியைச் சுற்றிப் பார்த்தார்கள். அவர்களது வனவாசத்தில் பத்தாண்டு காலம் முடிந்து பதினோறாவது ஆண்டு ஆரம்பமாகியது. இன்னமும் ஓராண்டு காலம் காட்டிலும் மேலும் ஓராண்டு அஞ்ஞாத வாசமும் முடிந்து விட்டால் துரியோதனன் அவர்களது நாட்டைத் திருப்பிக் கொடுக்க வேண்டும்.

தருமரைத் தவிர மற்ற பாண்டவர்களுக்கு துரியோதனன் நாட்டைக் கொடுப்பான் என்ற நம்பிக்கை ஏற்படவில்லை. போர் புரிந்துதான் துரியோதனனிடமிருந்து நாட்டைப் பிடுங்கிக் கொள்ள வேண்டுமென நான்கு பாண்டவர்களும் நினைத்தார்கள். அவர்களது எண்ணத்தை அறிந்த தருமர் கந்தமாதனப் பகுதியிலிருந்து வேறு இடத்திற்குப் போய் விடலாமெனக் கூறினார்.

பீமன் உடனே கடோத்கசனை நினைக்கவே அவனும் தன் ஆட்களோடு வந்து யாவரையும் விருஷபர்வரின் ஆசிரமத்தில் கொண்டு போய் விட்டான். அவர்கள் அங்கு கொஞ்ச காலம் இருந்துவிட்டு கிராத நாட்டின் சுபாகுபுரத்திற்குச் சென்றார்கள். அங்கு பாண்டவர்களின் பணியாட்கள் முன்பே தங்கி இருந்தார்கள். அவர்களையும் அழைத்துக் கொண்டு பாண்டவர்கள் இமய மலையில் விசாகயூபப் பகுதியை அடைந்தார்கள். அங்கு அவர்கள் ஓராண்டு

**– பீமனின் விடுதலை –**



காலத்தை கழிக்க எண்ணித் தங்கினார்கள்.

ஒருநாள் பீமன் வேட்டையாடச் சென்றான். அவன் சில மிருகங்களைக் கொன்ற பிறகு ஒரு பெரிய மலைப் பாம்பைக் கண்டான். பார்க்கவே அது பயங்கரமாக இருந்தது. அதன் வாயில் நான்கு கோரைப் பற்கள் இருந்தன. அது விஷ ஜ்வாலையைக் கக்கிக் கொண்டிருந்தது.

பீமன் அதனை அடிக்க முயன்றான். ஆனால் அது பீமனை பலமாகச் பற்றிப் பிடித்துக் கொண்டது. பீமன் அதனிடமிருந்து விடுபட முயன்றும் முடியாது போயிற்று. பீமனைக் காணாது எல்லோரிடமும் விசாரித்து விட்டு தருமர் பீமனைத் தேடிக் கொண்டு போகலானார். அவருக்குத் துணையாக தௌம்யரும் உடன் சென்றார். வழியில் பீமன் கொன்று போட்ட மிருகங்களைக் கண்டு அவன் அவ்வழியாகத்தான் சென்றிருக்க வேண்டுமென்று ஊகித்து அவர்கள் அந்த வழியிலேயே போய்க் கொண்டிருந்தார்கள்.

ஓரிடத்தில் அவர்கள் பீமனை ஒரு மலைப் பாம்பு இறுகப் பற்றிச் சுற்றிக் கொண்டிருப்பதைக் கண்டு திடுக்கிட்டு நின்றார்கள். தருமர் அந்தப் பாம்பைப் பார்த்து ''சர்ப்பராஜனே! இவனை விட்டுவிடு. இவன் என் தம்பி. இவனுக்கு பதிலாக உனக்கு வேறு எதாவது உணவைக் கொடுக்கிறேன்'' என்று பணிவுடன் வணங்கிக் கூறினார். ஆனால் பாம்போ ''உன் தம்பி எனக்கு அதிர்ஷ்டவசமாகக் கிடைத்தான். அவன்தான் இன்று எனது உணவு'' என்றது.

அதைக் கேட்ட தருமர் ''நீ யார்?'' எனக் கேட்கவே அதுவும் ''நான் உன் முன்னோர்களில் ஒருவன். என் பெயர் நகுஷன். நான் பல புண்ணியச் செயல்களையும் கடும் தவத்தையும் செய்து தேவலோக இந்திரப் பதவியைப் பெற்றேன். உயர் பதவி கிடைத்த கர்வத்தில் அந்தணர்களை அவமதித்தேன். அகத்தியர் என்ற முனிவரை என் பல்லக்கைத் தூக்க வைத்தேன். அவர் பல்லக்கைத் தூக்கிக் கொண்டு மெதுவாக நடந்தது கண்டு ஏன் ஊர்ந்து செல்கிறாய் என்று கடிந்து கொண்டேன். என் மீது கோபம் கொண்டு என்னைப் பாம்பாகப் போகும்படி சபித்தார். நான் அவரிடம் மன்னிப்புக் கோரி என் சாபத்திற்கு முடிவு எப்போது என்று கேட்டேன். நான் கேட்கும் கேள்விகளுக்கு யார் சரியான பதில்களைக்



கூறுகிறாரோ அப்போது நான் சாபத்தி லிருந்து விடுதலை பெறுவேன் என்று அவர் கூறினார்'' என்றது.

அப்போது தருமர் ''சரி. நீ கேள்வி களைக் கேள். நான் பதிலளிக்கிறேன். என் பதில்கள் சரியாக இருந்தால் உனக்கு சாப விமோசனம் கிடைக்க லாமே'' எனக் கூறினார். பாம்பும் ''சரி. அந்தணன் என்பவன் யார்? அவன் தெரிந்து கொள்ள வேண்டியது என்ன?'' என்று கேட்டது. தருமரும் ''இதற்கு எனக்குத் தெரிந்த பதிலைக் கூறுகிறேன். எவரிடம் சத்தியம், தானகுணம், பொறுமை, தவம், தயை, கருணை முதலியன உள்ள னவோ அவர் அந்தணராவார். அவர் சுகமும் துக்கமும் அணுகாத பரப்பிரம் மத்தைத்தான் அறிந்து கொள்ள வேண்டும்'' என்றார். அப்போது பாம்பு ''சரி. நீ சொல்லும் இக்குணங் கள் நான்காவது வர்ணத்தவரான சூத்திரரிடம் இருந்தால் அவரை அந் தணர் எனக் கொள்ளலாமா? நீ பரப் பிரம்மத்தை சுகமும் துக்கமும் அணு காதது எனக் கூறினாயே. அவை அணுகாத பொருள் வேறு எதுவும் இல்லையா?'' என்று கேட்டது.

தருமரும் ''சத்வகுணம் ஒரு சூத்திர ரிடம் இருந்தால் அவர் சூத்திரரே அல்ல. அந்தக் குணம் இல்லாத அந் தணனும் அந்தணனும் அல்ல. உலகில் நடத்தையே மேலானது. சுக துக்கங் கள் அணுகாதது பரப்பிரம்மத்தைத் தவிர வேறெதுவும் இல்லை'' என் றார்.

பாம்பும் ''உலகில் நடத்தைதான் மிக உயர்ந்தது என்று கூறினாயே. நடத்தையினால் ஒருவன் உயர்வை அடையலாம் என்றிருக்கும் போது இந்தவர்ணங்கள் என்ற பாகுபாடு எல்லாம் வீண்தானே?'' என்று கேட் டது. தருமரும் ''பேச்சு, பிறப்பு, இறப்பு என்பனவெல்லாம் எல்லா மானிடர்களுக்கும் பொதுவே. ஆனால் முன்பு அவரவர்களது மன இயல்புகளின் அடிப்படையில் வர்ணங்கள் நான்கு என வகுக்கப் பட்டன. ஆனால் வேதங்களைக் கற்ற வனுக்கும் நடத்தைதான் முக்கியம். பிராம்மணப் பெண்ணுக்குப் பிறந்த குழந்தை வேத சம்ஸ்காரத்தை அடை யும் வரை சூத்திரனாகவே கருதப் படுகிறது. அதன்பின் அவன் சத்வ குணத்தை அடைந்தாலே அவன் ஒரு பிராம்மணன் எனக்கருதப்படுகிறான். இந்த சத்வ குணமுடைய சூத்திரனை மேலானவன் என சுயம்பு மனுவே

கூறியுள்ளார்'' என்றார்.

அப்போது பாம்பு ''உன்விடைகள் எனக்கு முழு திருப்தியை அளித்தன. எனக்கும் சாப விமோசனம் ஏற்படு கிறது. உன் தம்பியையும் நான் விட்டு விடுகிறேன்'' எனக்கூறி பீமனைத்தன் பிடியிலிருந்து தளர்த்தி விட்டு விட் டது. மறு நிமிடமே பாம்பும் நகுஷ னாக மாறியது. அப்போது தேவலோ கத்திலிருந்து விமானம் வந்து நகுஷ னின் பக்கம் நிற்கவே அவனும் அதில் ஏறி அமர்ந்து கொண்டு தேவலோகத் திற்குச் சென்றான்.



தருமரும் தௌம்யரும் பீமனை அழைத்துக் கொண்டு தம்பர்ண சாலைக்குத் திரும்பி வந்தனர். அவர் கள் அங்குள்ளவர்களிடம் நகு ஷனைப் பற்றிக் கூறினார்கள். எல் லோரும் ''பீமன் இப்படி ஒரு ஆபத் தான செயலைச்செய்திருக்கக்கூடாது. நல்லவேளை தருமரின் உயரிய ஞானம் அவனைக் காத்தது!'' எனக் கூறி ஆறுதல் அடைந்தார்கள்.

மழைக் காலம் முடியும் வரை பாண்டவர்கள் துவைத வனத்தி லேயே இருந்தார்கள். அதன் பிறகு தம்மோடு இருந்தவர்களை எல்லாம் அழைத்துக் கொண்டு அங்கிருந்து அவர்கள் காம்யக வனத்தை அடைந் தார்கள். அங்கிருந்த ரிஷிக்களும் முனி வர்களும் அவர்களை வரவேற்று உபசரித்தார்கள். அப்போது பாண்ட வர்களைக்காண கிருஷ்ணரும் சத்திய பாமாவும் அங்கு வந்தார்கள். அப் போது அவர் எல்லோரும் கேட்கும் படியாக தருமரிடம் ''தருமா! நீ காட் டில் வனவாசம் செய்து கொண்டிருந்த போதிலும் நாட்டில் அனுசரிக்கும் தர்ம நெறிகளையே கடைப் பிடித்து வருகிறாய். தருமன் என்ற பெயருக் குப் பொருத்தமாக நீ நடந்து வரு கிறாய். உன் வனவாசமும் அஞ்ஞாத வாசமும் முடிந்ததும் உனக்கு உறு துணையாக நாங்கள் நிற்கிறோம். நீ மீண்டும் அரியானத்தில் அமர்ந்து நன்கு ஆட்சி புரிந்து பேரும் புகழும் அடைவாய். இதில் சந்தேகம் இல்லை'' என்றார்.

பின்னர் அவர் துரௌபதியைப் பார்த்து ''துரௌபதி! துரியோதன னுக்கு முடிவு காலம் நெருங்கி விட் டது. உன் குழந்தைகளை சுபத்திரை நன்கு கவனித்துக் கொண்டு வரு கிறாள். பிரத்யும்னன் அவர்களுக்கு அம்பு எய்யப் பயிற்சி அளித்து வரு கிறான்'' என்றார். தருமரும் அவரை வணங்கி ''உங்களை விட்டால் எங்



களுக்கு வேறு துணை யார் இருக்கிறார்கள்? எங்கள் வனவாசம் முடியப் போகிறது. அஞ்ஞாத வாசமும் முடிந்து விடும். அதன் பிறகு நாங்கள் என்ன செய்ய வேண்டுமென்று நீங்கள் தாம் எங்களுக்கு வழி காட்ட வேண்டும்'' என்று பணிவுடன் கூறினார்.

கிருஷ்ணர் பாண்டவர்களுடன் பேசிக் கொண்டிருக்கையில் என்றும் பதினாறாய் இளைஞராகத் தோன்றும் மார்க்கண்டேய முனிவர் அங்கு வந்தார். அவர் அங்குள்ளவர்களுக்குப் பல கதைகளைக் கூறியதோடு அறிவுரைகளையும் புகட்டினார். இது நடந்து கொண்டிருக்கையில் ஆசிரமத்துள் சத்தியபாமாவும் துரௌபதியும் உட்கார்ந்து கொண்டு பேசிக்கொண்டிருந்தார்கள்.

சத்தியபாமா துரௌபதியிடம் ''உன் கணவன்மார்கள் மிகவும் சாமர்த்தியசாலிகளாயிற்றே. அந்த ஐவரும் உன் மனம் நோகாமல் உன்னிடம் நடந்து கொள்கிறார்களே. உன்னை மிகவும் மதித்து அன்பு காட்டி வருகிறார்களே. அவர்கள் இவ்வாறு நடக்க நீ எதாவது விரதங்களை மேற்கொண்டாயா அல்லது வசிய மருந்து, மாத்திரை என்று ஏதாவது கொடுத்து வருகிறாயா? அந்த ரகசியத்தை எனக்கும் கூறினால் எனக்கும் பயனுள்ளதாய் இருக்கும்'' என்று கேட்டார்.

அதுகேட்டு துரௌபதி ''நீ சொன்னபடி எல்லாம் நான் ஒன்றும் செய்யவில்லை. இந்த மாதிரி தன் மனைவி மந்திரம், வசியம் என்ற முறைகளைக்கையாள்கிறாள் என ஒரு கணவன் அறிந்தால் அவன் தன் மனைவியிடம் அருவருப்பே கொள்வான். நான் என் கணவர்களிடம் அது வேண்டும், இது வேண்டும் என்றெல்லாம் கேட்பதில்லை. என்னிடம் அன்பாக என் கணவர்கள் இருக்கிறார்கள் என்பதற்காக நான் அவர்களுக்குச் செய்ய வேண்டிய பணிகளில் அசட்டையாக இருப்பதில்லை. அவர்களையும் எந்த வேலையையும் செய்ய விட மாட்டேன். அவர்களுக்குப் பிடித்தமான உணவை நானே தயாரித்துப் பரிமாறுகிறேன். அவர்கள் சொல்லித்தான் எதையும் செய்ய வேண்டுமென்று நான் காத்திருப்பதில்லை அகாரணமாகச் சிரிக்க மாட்டேன். என் கணவர்களின் மற்ற மனைவிகளைக் கண்டு நான் பொறாமையும் படமாட்டேன். நம்மைத்

தேடி வரும் விருந்தாளிகளை நன்கு உபசரிப்பேன். ஹஸ்தினாபுர அரண்மனையில் உள்ள எல்லோரையும் சமமாக பாவித்து நடந்து வந்தேன். குடும்பத்தின் முழுப் பொறுப்பையும் நான் ஏற்று நிர்வகித்து வந்தேன். இவற்றால்தான் என் கணவன்மார்கள் என்னிடம் குறையாத அன்பு காட்டி வருகிறார்கள்'' என்றாள்.

சத்தியபாமாவும் ''ஆகா! எவ்வளவு நல்ல விஷயத்தை விளக்கமாகக் கூறினாய். நானும் இனி நீ கூறியது போலவே நடப்பேன்'' என்றாள். இதன் பிறகு சத்தியபாமா கிருஷ்ணரோடு கிளம்பத் தயாரானாள். அவரும் எல்லோரிடமும் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டார். மார்க்கண்டேய முனிவரும் எல்லோரையும் ஆசீர்வதித்து விட்டுத் தம் வழியே சென்றார்.

பாண்டவர்கள் காம்யக வனத்திலிருந்து துவைத வனத்திற்கு வந்து ஒரு அழகிய குளக்கரையில் தம் பர்ணசாலையை அமைத்துக் கொண்டார்கள். இச்சமயம் அப்பகுதியில் வசித்து வந்த ஒரு அந்தணர் ஹஸ்தினாபுரத்திற்குப் போய் திருதராஷ்டிரனைக் கண்டு ''அரசே! நான் துவைத வனத்தில் வாழ்பவன். அங்கு பாண்டவர்களும் துரௌபதியும் வெய்யிலிலும் மழையிலும் குளிரிலும் அவஸ்தைப் பட்டுக்கொண்டிருக்கிறார்கள். அரண்மனையில் வாழ்ந்து சுகமாக இருக்க வேண்டிய அவர்களுக்கு இந்த நிலையா? பார்க்கவே பரிதாபகரமாக உள்ளது'' என்றார்.

திருதராஷ்டிரனும் ''என் மகன்கள் எல்லோரையும் விட தருமன் பொறுமைசாலி. மிகவும் உயரிய குணம் படைத்தவன். பீமன் ஒருவனைத் தவிர மற்ற பாண்டவர்கள் தருமனின் சொல்லுக்கு உடனேயே கட்டுப்படுபவர்கள். பீமனும் தருமன் கூறுவதற்கு சற்றுத் தாமதித்துக் கட்டுப்படுபவனே. என் மகன் துரியோதனின் குணம் கொடியது. அவனால்தான் பாண்டவர்கள் இப்போது வனவாசம் செய்ய வேண்டியதாயிற்று. பாண்டவர்கள் திரும்பி வந்து தம் நாட்டைக் கொடுக்குமாறு கேட்டால் அவன் கொடுக்கமாட்டான். இதனால் பயங்கர விளைவுதான் நேரிடும்'' எனக் கூறிப் பெருமூச்சு விட்டான்.



# கோபக்கார அதிகாரியின் கதி!

சிவபுரஜமீனில் ஒரு பகுதியில் தொடர்ந்து மூன்று வருடங்களாக மழை பெய்யாததால் மக்களால் வரி செலுத்த முடியவில்லை. அப்பகுதி நிர்வாக அதிகாரி சிவராமன் இளகிய மனம் படைத்தவன். அதனால் மக்களைத் துன்புறுத்தி வரி வசூலிக்க விரும்பாமல் பேசாமல் இருந்தான். ஆனால் வரி வசூலிக்காதது அவனது குற்றம் எனக் கூறி ஜமீன்தாரர் அவனை வேலையிலிருந்து நீக்கி முத்தையன் என்பவனை அப்பகுதி நிர்வாக அதிகாரியாக நியமித்தார். முத்தையன் முரடன், முன் கோபி, முட்டாள் தனமாகச் செயல்படுபவன். அவன் அப்பகுதி நிர்வாகத்தை ஏற்றதும் ''எல்லோரும் ஜமீனுக்குச் செலுத்த வேண்டிய வரிப் பணத்தை நாளைக்குள் செலுத்திவிட வேண்டும், தவறினால் அவர்களது நிலம் அவர்களிடமிருந்து பறிக்கப் படுவதோடு சிறையிலும் அடைக்கப்படுவார்கள்'' என்று அறிவித்தான்.

அவ்வூரில் காளமேகன் என்ற இளைஞன் இருந்தான். அவன் மிகவும் கெட்டிக்காரன். அவன் முத்தையனை அணுகி ''ஐயா! நீங்கள் வரி வசூலிக்கும் பணத்தை எங்கே வைப்பீர்கள்? இங்கு கொள்ளைக்காரர்கள் நடமாட்டம் அதிகமாயிற்றே, உங்களிடம் பணம் இருப்பது தெரிந்தால் மறு விநாடியே வந்து கொள்ளை அடித்துக் கொண்டு போய்விடுவார்களே'' என்றான். அது கேட்டு முத்தையன் பயந்து ''அந்தக் கொள்ளைக்காரர்கள் உன் வீட்டிற்கு வருவதில்லையா?'' என்று கேட்டான்.

காளமேகமும் ''அவர்கள் வராமலிருக்க நான் ஒரு உபாயத்தைக் கையாள்கிறேன். அவர்கள் என் வீட்டுப் பக்கம் வராதிருக்க நான் வேட்டை நாய் குரைப்பது போல அரை மணி நேரத்திற்கு ஒரு முறை 'பே' 'பே' என்று கத்துகிறேன்'' என்றான். முத்தையனும் ''அட முட்டாள்! வேட்டை நாய் 'பே' 'பே' என்று கத்தாது 'லொள்' 'லொள்' ளென்று குரைக்கும். உன் யோசனை சரியானதே'' எனக் கூறி அப்போது முதல் அரை மணி நேரத்திற்கு ஒரு முறை 'லொள்' 'லொள்' ளென்று நாய் குரைப்பது போலக் கத்தலானான்.

இதைக் கண்ட வேலைக்காரர்கள் முத்தையனின் மூளை கலங்கிவிட்டது என ஜமீன்தாரரிடம் புகார் செய்ய, அவர் அப்பகுதியின் உண்மை நிலையை அறிந்து முத்தையனை வேலையிலிருந்து நீக்கி சிவராமனையே மீண்டும் அப்பதவியில் அமர்த்தினார்.



# வாழை மரம்

வாழை, மா, பலா எனப்படுவது முக்கனிகள். இவற்றில் வாழைக்குச் சிறப்பிடத்தை அளிக்கிறோம். இது தென்னிந்தியாவில் மிக அதிமாயும் வட இந்தியாவில் ஆங்காங்கும் தென்படுகிறது. சம்ஸ்கிருதத்தில் இதற்கு வழங்கப்படும் 'கதலி' என்ற சொல் அநேகமாக எல்லா இந்திய மொழிகளிலும் பயன் படுத்தப் படுகிறது. ஹிந்தியில் இதனைக் 'கேலா' எனக் கூறுகிறார்கள். தமிழிலும் மலையாள மொழியிலும் வாழை என இது கூறப்படுகிறது.

இந்துக்களும் பௌத்தர்களும் வாழையைப் புனிதமாகக் கருதுகிறார்கள். பௌத்த இலக்கியங்களில் வாழைப்பழத்தால் தயாரிக்கப்பட்ட பானம் மோச பானம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. சம்ஸ்கிருதத்தில் மோசா என்றாலும் வாழை என்ற பொருள். அனுமார் கூட இமயமலைப் பகுதியில் வாழைத் தோட்டத்தில் வசித்து வந்ததாக நம் புராணங்கள் கூறுகின்றன.

வாழை மரத்தின் எல்லாப் பகுதிகளும் நமக்குப் பயன்படுகின்றன. வாழைக்காய், வாழைப்பூ, வாழைத் தண்டு ஆகியவற்றைச் சமைத்து உண்கிறோம். வாழை இலை மீது உணவு பரிமாறி உண்கிறோம். வாழைப் பட்டைகளைச் சீவி இலைகளாகத் தைத்தும், உலர வைத்த பட்டைகளில் பொடிகளையும் மற்றும் பல பொருள்களை வைத்துக் கட்டவும் பயன்படுத்துகிறோம். சுபகாரியங்களின் போது வாழை மரங்களை குலைகளோடும் அதன் பூக்களோடும் வாசல்களில் கட்டுகிறோம்.

வாழையில் பூவன், ரஸ்தாளி, கற்பூர வாழை, மொந்தன், பச்சை, சிறு மலைப்பழம், நேந்திரன் எனப் பல வகைகளைக் கூறலாம் வாழை 5000 வகைப்படும் எனவும் கூறுகிறார்கள். வாழை இலை நீண்டும் அகலமாயும் இருக்கும். வாழை மரம் ஒரு முறை குலை தள்ளிவிட்டால் மறுபடியும் பயன் படாது. அதனால் அம்மரத்தை வெட்டி விடுவார்கள். ஆனால் அதனடியிலுள்ள கிழங்கு புதிய வாழைக் கன்றுகளைத் தோற்றுவிக்கும்.



# பரத்துவாஜர்

மனிதர்கள் யாவரும் தாம் நீண்ட காலம் வாழவேண்டுமென்றே ஆசைப்படுகிறார்கள் ஆனால் அவர்கள் அவ்வாறு வாழ்ந்து பிறரை முன்னேற்று வதற்காக என்றிருந்தால் அது பாராட்டத் தக்கதே. இவ்வாறு வாழ்ந்து காட்டியவர் சப்தரிஷிகளில் ஒருவரான பரத்துவாஜர்.

இவர் அத்திரிமகரிஷியின் புதல்வர். இராமாயணத்தை உலகினுக்கு அளித்த வால்மீகி முனிவரின் சீடர். அவரிடம் தல்வி பயின்றும் அது போதாது என மேலும் கற்க அவர் விரும்பினார். தேவர் களின் ஆசி பெற்று வேத சாஸ்திரங்களை ஆழ்ந்து படிக்கலானார். அவரது வாழ் நாட்கள் முடியும் தருணத்தில் அவர் இந்திரனை தியானித்துத் தனக்கு இன்ன மும் வாழ வரம் அளிக்குமாறு கோரினார்.

இந்திரன் அவர் முன் தோன்றி அவ ரைத் தன் பின்னாலேயே வரும்படிக் கூறினான். அவரை மூன்று மலைகளுக்கு மத்தியில் நிறுத்தி அவரது கையில் மூன்று பிடி மணலைக் கொடுத்து ''இந்த மலை களோடு இதை ஒப்பிட்டுக் கூறுங்கள்'' என்றான். பரத்துவாஜரும் ''மலை களுக்கு முன் இந்த மணல் மிகமிகச் சிறியதே'' என்றார். அப்போது இந்திரன் ''நீங்கள் கற்றது இந்த மணலின் அளவே கற்க வேண்டியதோ இந்த மலைகளின் அளவு'' என்றான். பரத்துவாஜரும் ''ஆகா. நான் கற்க வேண்டியது இந்த மலைகளின் அளவா? அப்படியானால் நான் அவ்வளவையும் முழுமையாகக் கற்றுக் கொள்ள எனக்கு ஆசீர்வாதம் கொடுங்கள்'' என்றார். அதைக் கேட்ட இந்திரன் மகிழ்ந்து அவர் அறிவை மேலும் மேலும் வளர்த்துக் கொள்ள விரும்புவதைப் பாராட்டி அவர் விரும் பியது போல அவரது ஆயுட்காலத்தை யும் நீட்டித்தான்.



# உங்களுக்குத் தெரியுமா?

1. ஆக்ராவின் பெயர் ஆக்ரபசா என்ற சொல்லிலிருந்து வந்தது? இதன் பொருள் என்ன?
2. 1972ல் புலியை நம் தேசிய மிருகமாக அறிவித்தார்கள். அதற்கு முன் தேசிய மிருகமாக இருந்தது எது?
3. இந்தோனேஷியாவின் தலைவர் சுஹர்த்தோவை சுகர்ணவோவின் புதல்வி எதிர்த்துத் தேர்தலில் நிற்கிறார். அவரது பெயர் என்ன?
4. நம் பிரதமர் தேவகௌடா கர்நாடக மாநிலத்தின் எந்த மாவட்டத்தைச் சேர்ந்தவர்?
5. ஜப்பானில் நாகசாகி ஹிரோஷிமா ஆகிய இரு நகரங்களின் மீது அணுகுண்டுகள் போடவே இரண்டாவது உலகப் போர் நின்றது. ஆனால் அமெரிக்கா முதலில் நாக சாகிக்குப் பதிலாக வேறொரு நகரின் மீது அணுகுண்டு போடுவதாக இருந்தது. அந்த நகரம் எது?
6. சமையலறையில் தென்படும் ஒரு பூச்சியை வெடிகுண்டால் கூடச் சாகடிக்க முடியாது அது எது?
7. ஆப்ரிக்காவில் ஓவென் நீர் வீழ்ச்சி எங்கே உள்ளது?
8. ஒலிம்பிக் பந்தயங்கள் 1896ல் ஆரம்பமான போதிலும் அதற்கான பிரமாணம் வேறொரு ஆண்டிலிருந்துதான் எடுக்கப்பட்டு வருகிறது. அந்த ஆண்டு எது?
9. நம் நாட்டில் 1962ல் தான் எஸ்.டி.டி. தொலை பேசி முறை தொடங்கப் பெற்றது. அப்போது முதலில் எந்த இரு நகரங்கள் தொடர்பு கொண்டன?
10. குழந்தைகளுக்குப் பிரியமான ஒன்றை இடாலோ மார்ஸியானி கண்டுபிடித்தார். அது என்ன?
11. அமெரிக்காவில் 1815ல் ஆரம்பமான ஒரு விளையாட்டு பின்னர் ஆசிய நாடுகளில் பிரபலமாகியது. அது என்ன விளையாட்டு?
12. 'காமன் வெல்த் கேம்ஸி'ன் முந்தைய பெயர் என்ன?
13. முதலாவது சதம் டெஸ்ட் மேச்சில் அடித்த முதலாவது கிரிக்கெட் வீரர் யார்?
14. பத்மஸ்ரீ, பத்ம பூஷண், பத்மவிபூஷண், பாரத ரத்னா ஆகிய நான்கு பட்டங்களையும் பெற்ற இந்தியர் யார்?
15. திட்டக் கமிஷன் முதலில் எப்போது நிறுவப்பட்டது? அதன் துணைத் தலைவர் யார்?

## விடைகள்

1. சொர்க்கப் பூங்கா.
2. சிங்கம்.
3. மேகாவதி சுகர்ணோபுத்திரி.
4. ஹாலன்.
5. ஹீரோஷிமா அருகிலுள்ள கோகூரா.
6. கரப்பான்.
7. உகாண்டா.
8. 1920, ஆண்வர் ஒலிம்பிக்கிலிருந்து.
9. லக்னோவுக்கும் கான்புருக்குமிடையே.
10. ஐஸ்க்ரீம் கோன்.
11. வாலிபால்.
12. பிரிட்டிஷ் எம்பையர் கேம்ஸ்.
13. லாலா அமர்நாத்.
14. சத்தியஜித் ராய்.
15. 1950ல் பேராசிரியர் மஹாலனோபிஸ்.

# அம்புலிமாமா செய்திகள்

**லாலிபாப் மழை!**

தாய்வான் தலைநகர் தெய்போவில் ஒரு நாள் ஆகாயத்தில் பெருத்த சத்தத்துடன் ஒரு ஹெலிகாப்டர் பறக்கவே எல்லோரும் தம் வீடுகளிலிருந்து வெளியே வந்து அதனைப் பார்த்தார்கள். பெரிய லாலிபாப் வடிவத்தில் அது இருந்ததைக் கண்டு அவர்கள் ஆச



சரியப்பட்டார்கள். அதை விட ஆச்சரியம் என்னவென்றால் அது லாலிபாப் மிட்டாய் களை மழை பெய்வது போல ஆகாயத்தி லிருந்து கொட்டிவிட்டுப் போனது தான். குழந்தைகளுக்கு அதனால் ஏற்பட்ட மகிழ்ச்சி யைக் கூறவும் வேண்டுமா?

**மிகப் பெரிய பானர்!**

நகரங்களில் பல நிறுவனங்கள் தாம் விற்கும் பொருள்களைப் பெரிய துணிகளில் பல வண்ணங்களில் எழுதி உயர நிறுத்தி வைப்பதைக் காணலாம். இவற்றை பேனர் கள் என்கிறார்கள். திரைப்பட விளம்பரங்கள் பெரும்பாலும் இவ்வாறு செய்யப்படு கின்றன. ஆனால் அண்மையில் பம்பாயில் எய்ட்ஸ் நோயின் பயங்கரம் பற்றிப் பொது மக்களுக்குத் தெரிவிக்க ஒரு மிகப் பெரிய பானர் பயன்படுத்தப்பட்டது. உலகம் முழு வதும் டிசம்பர் முதல் தேதியை எய்ட்ஸ் ஒழிப்பு நாளாகக் கொண்டாடினார்கள். அன்று பம்பாயில் 10,000 பேர் கொண்ட ஒரு கூட்டம் எய்ட்ஸின் பயங்கர விளைவுகள் பற்றிய வாசகங்களை ஒரு மிகப் பெரிய பேனரில் எழுதிப் பிடித்துக் கொண்டு சென்றது. அந்த பானரின் நீளம் 4.5 கிலோ மீட்டர்!

**பணம் கொடுக்கும் சாண்டாக்ளாஸ்**

பெர்லின் பல்கலைக்கழகத்தின் அறை ஒன்றில் தனிச் சிறப்பு வாய்ந்த வகுப்பு ஒன்று நடத்தப்பட்டது. அது அந்தப் பல்கலைக் கழ கத்தில் பயிலும் மாணவர்களுக்கு மட்டுமே ஆனது ஆனால் அந்த மாணவர்கள் யாவரும் கிருஸ்மஸ் சாண்டாக்ளாஸ் (செண்ட் நிக லாஸ்) போல சிவப்புச் சட்டை அணிந்து வெள்ளை தாடி வைத்துக் கொண்டு கிழவர் கள் போல வந்திருந்தார்கள். ஏனென்றால் அவர்கள் பல ஐரோப்பிய நாடுகள் நடத்தும் சாண்டாக்ளாஸ் போட்டிகளில் கலந்து



கொண்டு பரிசுகளைப் பெறத்தான் அங்கு நடிப்புக் கலையில் பயிற்சி பெற்றார்களாம். சாண்டாக்ளாஸ் அவர்களுக்கு இவ்விதமா கப் பணம் சம்பாதிக்க வழி செய்தார்!



# கடமை தவறாதவன்

லட்சுமணன் ஒரு வைர வியாபாரி. அவனுக்கு மூன்று ஆண் குழந்தைகளும் வள்ளி என்ற பெண் குழந்தையும் இருந்தன. அவன் கப்பலேறி வியாபாரம் செய்ய அயல் நாட்டிற்குச் சென்றிருந்த போது அவனது மனைவி இறந்து விட்டாள். இதற்குச் சில நாட்களுக்குப் பிறகே லட்சுமணன் ஊருக்கு திரும்பி வர முடிந்தது.

தாயை இழந்த குழந்தைகளை வளர்ப்பது எப்படி என அவன் யோசித்தான். கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தவனாய் தன் கணக்குப் பிள்ளையிடம் "நான் வள்ளியோடு கும்பகோணம் மகாமகத்திற்குப் போய் விட்டு வருகிறேன்" என்று கூறி அவன் வள்ளியோடு சென்றான்.

அவன் ஊர் திரும்பிய போது வள்ளி அவனோடு இல்லை. வீட்டில் நுழையும் போதே அவன் அழுதவாறே "என் வள்ளி மகாமக குளத்தில் மூழ்கி இறந்து விட்டாளே" எனக் கதறினான். அவனுக்குக் கணக்குப் பிள்ளையும் மற்றவர்களும் ஆறுதல் கூறினார்கள்.

லட்சுமணன் வியாபாரத்தை கவனியாமல் தன் மூன்று மகன்களையும் வளர்க்கலானான். ஆறு மாதங்களாயின. அப்போது அவன் தன் வியாபாரத்தில் நஷ்டம் ஏற்படுவது போல இருப்பது கண்டு தன் நம்பகமான கணக்குப் பிள்ளையிடம் தன் மூன்று மகன்களையும் ஒப்படைத்து அவர்களை வளர்க்க ஏற்பாடு செய்து விட்டு அயல்நாடுகளுக்கு வியாபாரம் செய்யச் சென்றான். அவன் இரண்டு அல்லது மூன்று வருடங்களுக்கு ஒரு முறை தன் ஊருக்கு வந்து நாலைந்து நாட்கள் அவர்களோடு இருந்து விட்டு மீண்டும் வியாபாரம் செய்ய அயல் நாடுகளுக்குச் சென்று வரலானான். இப்படியாக பதினைந்து ஆண்டுகள் கழிந்தன.

ஒருமுறை லட்சுமணன் ஊர் திரும்

— பாபநாசம் சாமா —



பிய போது தன் மகன்களிடம் ''எனக்கு வியாபாரத்தில் இப்போது நஷ்டம் தான் ஏற்பட்டு வருகிறது. இந்த முறை லாபம் கிடைக்கும் என்று எண்ணிப் போகிறேன். வயதான நான் எவ்வளவு நாட்கள் உயிரோடு இருப்பேன் எனக் கூற முடியாது. இந்த வீட்டை விட்டுச் செல்கிறேன். இதில் வட்புறமுள்ள ஒரு அறை பூட்டப்பட்டுள்ளது. அந்த அறையின் பரண் மீது ஒரு பெட்டி உள்ளது. அதுதான் உங்களுக்கு விட்டு விட்டுப் போகும் சொத்து. நான் இறந்த பிறகு அப்பெட்டியை திறந்து பார்த்து அதன்படி மூவரும் செயல் படுங்கள். நீங்கள் உடன் பிறந்தவர் களை விட்டுக் கொடுக்கக் கூடாது. இன்னொரு விஷயம் கும்பகோணத் திற்கு அருகேயுள்ள கருப்பூரில் என் நண்பன் சிதம்பரம் இருக்கிறான். அவன் மகள் சிவகாமிக்கு நீங்கள் மூவரும் உங்கள் செலவில் மண முடித்து வைக்க வேண்டும். சிதம்பரத் திற்கு இது நான் கொடுத்த வாக்கு. இதை நிறைவேற்றுவீர்களா?'' என்று கேட்டான். மூவரும் அதை நிறை வேற்றுவதாகக் கூறினார்கள். லட்சு மணனும் வியாபாரம் செய்ய கப்ப லேறிப் போய் விட்டான்.

லட்சுமணன் சென்ற கப்பல் நடுக் கடலில் மூழ்கியது. அதிலிருந்த இரு மாலுமிகளைத்தவிர கப்பலில் இருந்த மற்றவர்கள் எல்லாம் கடலில் மூழ்கி இறந்து போயினர். உயிர் பிழைத்த இரு மாலுமிகள் ஊருக்கு வந்து லட்சு மணன் இறந்த செய்தியை அவனது மூன்று மகன்களிடமும் தெரிவித்தனர்.

அப்போது அந்த மூன்று மகன் களுக்கும் தம் தந்தை கூறிய வடபுற அறையின் நினைவு வந்தது. பரண் மீதுள்ள பெட்டியில் தந்தை பணத்தை வைத்திருப்பார் என்று எண்ணி அவர் கள் அந்தப் பெட்டியைக் கீழே இறக்கி அதைத் திறந்து பார்த்தார்கள். அதில் அவர்கள் எதிர்பார்த்தபடி பணம் எதுவும் இருக்கவில்லை. ஒரே ஒரு காகிதத் துண்டு இருந்தது. அதில் ''மறக்காமல் சிதம்பரத்தின் மகளுக் குக் கல்யாணம் செய்து வைக்கவும். இது என் கடைசி விருப்பம்'' என எழுதி இருந்தது.

தம் தந்தை தங்களுக்கு ஒரு செப்புக் காசு கூட வைக்காமல் எங்கோ யாரு டைய மகளுக்கோ கல்யாணம் செய்து வைக்க வேண்டும் எனக் கோரியது அவர்களுக்கு எரிச்சலை மூட்டியது. அன்றிரவு மூவரும் படுத்துத் தூங்க லாயினர். நள்ளிரவில் மூத்த மகன்

எழுந்து தன் சகோதரர்களிடம் சொல்லிக் கொள்ளாமலேயே ஓடிப் போய் விட்டான். காலையில் எழுந்த மற்ற இரு சகோதரர்களும் தன் அண்ணன் தங்களை விட்டு ஓடிப் போனதை அறிந்து கொண்டனர். அப்போது கடைசி மகன் ''நம் அண்ணன் இந்தப் பொறுப்பை நம்மீது சுமத்தி விட்டு ஓடி விட்டான். இப்போது இருப்பது இந்த ஒரு வீடுதான். இதை விற்று அந்தப் பணத்தைக் கொண்டு சிதம்பரத்தின் மகளுக்குக் கல்யாணம் செய்து வைத்து நம் தந்தையின் கடைசி விருப்பத்தை நிறைவேற்றுவோம்'' என்றான். இரண்டாவது மகனும் அதற்கு இணங்கினான்.



நான்கு நாட்களில் அவர்கள் தம் வீட்டை விற்றுவிட்டு அந்தப் பணத்துடன் கும்பகோணத்தருகே உள்ள கருப்பூருக்குக் கிளம்பினார்கள். அவர்கள் வழியில் ஒரு ஊரில் ஏதோ பஞ்சாயத்து வழக்கு நடப்பது கண்டு அது என்ன என்று பார்க்கலானார்கள். வழக்கு இதுதான். ஒரு பணக்காரன் இரு மகன்களையும், ஒரு மகளையும், தன் மனைவியையும் விட்டுவிட்டு இறந்து போய் விட்டான். இரு மகன்களும் தந்தை விட்டுப் போன சொத்தை எடுத்துக் கொண்டு தம் தாயையும், தங்கையையும் வீட்டை விட்டு துரத்தி விட்டார்கள். அவர்களிருவரும் பஞ்சாயத்தாரிடம் முறையிடவே பஞ்சாயத்தும் கூடியது. பஞ்சாயத்துத் தலைவர் வழக்கை விசாரித்து விட்டு முடிவில் ''பணக்காரர் விட்டுப் போன சொத்தைக் கொண்டு அவரது இரு மகன்களும் தம் தாயையும் தங்கையையும் தம்மோடு வீட்டில் வைத்துக் கொள்வதோடு தங்கையின் திருமணத்தையும் செய்து வைக்க வேண்டியது அவர்களது கடமை. அதை அவர்கள் செய்ய வேண்டுமென இந்தப் பஞ்சாயத்து தீர்ப்பு கூறுகிறது'' என்றார். அங்கு கூடி இருந்தவர்களும் அதுவே சரியான தீர்ப்பு எனக் கூறி மகிழ்ந்தார்கள்.

இதை கவனித்த இரு சகோதரர்களும் ''சரி. நாம் இவ்வூர் சத்திரத்தில் தங்கி விட்டு நாளை கருப்பூருக்குச் செல்வோம்'' எனத் தீர்மானித்து அன்றிரவு அவ்வூர்ச் சத்திரத்திற்குப் போய் அங்கு ஓரிடத்தில் படுத்தார்கள். நள்ளிரவில் இரண்டாவது மகன் வீட்டை விற்று எடுத்து வந்த பணப்பையை எடுத்துக் கொண்டு தன் தம்பியை அங்கேயே விட்டு விட்டுப் போய் விட்டான்.

காலையில் எழுந்த கடைசி மகன் தன் அண்ணனையும் பணப் பையையும் காணாது முதலில் திகைத்தாலும் பிறகு மனதை திடப்படுத்திக் கொண்டு கருப்பூருக்குச் சென்றான். அங்கு சிதம்பரத்தின் வீட்டை வெகு எளிதில் கண்டுபிடித்து விட்டான். ஆனால் அது மிகப் பெரிய மாளிகையாக இருப்பது கண்டு மலைத்துப் போய் ''இதில் வசிப்பவருடைய மகளுக்கா நான் திருமணம் செய்து வைக்க வேண்டும்? எதற்கும் சிதம்பரத்தைக் கண்டு பேசலாம்'' என எண்ணி அந்த மாளிகைக்குள் போய் ''ஐயா!'' என்று குரல் கொடுத்தான்.

அப்போது ஐம்பது வயது மதிக்கத் தக்க ஒருவர் வந்து ''யாரது? என்ன வேண்டும்?'' என்று கேட்டார். கடைசி மகனும் ''நான் சிதம்பரத்தைப் பார்க்க விரும்புகிறேன்'' எனவே அவரும் ''நான்தான் சிதம்பரம்'' என்றார். அப்போது கடைசி மகன் ''நான் தங்களது நண்பர் லட்சுமணனின் கடைசி மகன்'' எனக் கூறித் தன் தந்தையின் விருப்பத்தையும் தன் இரு அண்ணன்களின் செயல்களையும் கூறினான். பிறகு அவன் ''நான் ஏழை தான். எப்பாடுபட்டாவது பணம் சம்பாதித்து என் தந்தையின் விருப்பப்படி தங்கள் மகளது திருமணத்தைச் செய்து விடுகிறேன். ஆனால் அதற்குக் கொஞ்ச நாட்களாகலாம்'' என்றான்.

சிதம்பரம் சிரித்தவாறே ''உன் தந்தை தன் மகன்களில் யார் தம் கடமையைச் செய்வானெனக் காணவே இப்படிச் செய்தார். இங்கே இருப்பவள் என் சொந்த மகளல்ல. என் வளர்ப்பு மகள். அதுவும் அவள் உன் தங்கை வள்ளி. அவளது எதிர்காலம் பற்றிக் கவலைப்பட்டே அவளை என்னிடம் கொடுத்து வளர்க்கச் சொன்னார். என்னைத் தேடி வரும் அவரது மகனிடம் இரண்டு லட்சம் பவுன்களைக் கொடுக்கச் சொல்லி பணம் விட்டு வைத்தார். இப்போது உன் தங்கையை வரச் சொல்கிறேன் பார்'' எனக்கூறி 'சிவகாமி' எனக் குரல் கொடுக்க வள்ளி பல நகைகளை அணிந்தவளாய் வந்து நின்றாள்.

அண்ணனும் தங்கையும் கூடி விட்டனர். வள்ளியின் திருமணத்தைக் கடைசி மகனே சிறப்பாக நடத்த, லட்சுமணனின் கடைசி விருப்பம் நிறைவேறியது.





# சரியான தீர்ப்பு!

கனகபுரத்தில் கனகுப்தன் என்ற பணக்காரன் இருந்தான். அவனுக்கு அமரன், சமரன், விமலன் என்ற மூன்று புதல்வர்கள் இருந்தனர். மூவரும் இளைஞர்கள் நல்ல அறிவாளிகள். சண்டைபோட்டுக்கொள்ளாமல் ஒற்றுமையுடன் இருந்து வந்தார்கள். எல்லா விஷயங்களையும் ஒளிவு மறைவில்லாமல் தமக்குள் அவர்கள் பேசிக் கொண்டாலும் ஒரே ஒரு விஷயத்தை மட்டும் அவர்கள் ஒவ்வொருவரும் மறைத்து வந்தார்கள்.

அதுதான் அவர்கள் மூவருமே கனகபுர இளவரசி மீது ஆசை வைத்திருந்தது. ஒவ்வொருவனும் தான் எப்படியாவது அரசகுமாரியை மணந்து கொண்டுவிடுவது என்று தீர்மானித்திருந்தான். அவர்கள் மூவரும் தினமும் மாலையில் அரண்மனைக்குப் பக்கத்திலுள்ள பூங்காவிற்குப் போய் உலாவுவது வழக்கம். அப்போது அரசகுமாரி அரண்மனை மேல் மாடத்திற்கு வந்து உலாவுவது கண்டு அவர்கள் மனம் மகிழ்ந்து வந்தனர்.

அரசகுமாரி அனுபமா இவர்களைப் பாராமல் தன் வேலைகளில் ஈடுபட்டு வந்தாள். இப்படியே நாட்கள் கழிந்தன. ஒருநாள் கனககுப்தன் தன் மகன்களிடம் ''மகன்களே! எனக்கு வயதாகி விட்டது. நான் நிறையச் சம்பாதித்தும் வைத்திருக்கிறேன். நீங்கள் சுகமாக இருக்கலாம் என்றாலும் நீங்கள் மணம் செய்து கொண்டு குழந்தை குட்டிகள் என்றாகி விட்டால் இந்தப் பணமெல்லாம் கரைந்து விடும். நானும் என் முன்னோர்களும் வியாபாரத்தை மேற்கொண்டு சிறுகச் சிறுக பணம் சேர்த்தவர்கள். எனவே நீங்களும் உங்கள் முன்னோர்கள் செய்த தொழிலையே செய்ய வேண்டும். அதனால் நீங்கள் வெளியூர் போய் வியாபாரம் செய்து பணம் சம்பாதித்து வரவேண்டும். இதுதான் உங்களுக்கு அழகு'' என்றான்.

— கி. பாலாஜி —



அவர்களும் தம் தந்தை கூறியபடி வெளியூர் போய் வியாபாரம் செய்து வர ஒரு நல்ல நாளில் தம் ஊரை விட்டுக் கிளம்பினார்கள். வழியில் அவர்கள் மாதவபுரத்தை அடைந்து அந்த ஊர்சந்தையில் பலவிதமான பொருள்கள் இருப்பதைக் கண்டார்கள். மூவரும் ''இவ்வூர்ச் சந்தையில் பல அதிசயப் பொருள்கள் உள்ளன. அவற்றை இப்போது வாங்க ஆசைப்பட வேண்டாம். நாம் நிறையப் பணம் சம்பாதித்து இங்கு வந்து நாம் விரும்பும் பொருளை வாங்கிக் கொள்வோம்'' எனப் பேசிக் கொண்டார்கள். அப்போது மூவரும் அன்றைக்குச் சரியாக ஒரு வருஷத்திற்குப் பிறகு அதே சந்தையில் சந்திப்பது எனத் தீர்மானித்து மூன்று வெவ்வேறு திசைகளில் சென்றனர்.

சரியாக ஒரு வருடம் கழிந்தது. முதலில் அங்கு வந்தது விமலன். அவன் சந்தையைச் சுற்றி வந்தபோது ஒரு அபூர்வ எலுமிச்சம் பழத்தைக் கண்டான். அதை அறுத்து அதன் சாறைப் பிழிந்து கொடுத்தால் மிக கடுமையான நோயால் அவஸ்தைப்படுபவனாக இருந்தாலும் அவன் மறு நிமிடமே குணமடைந்து விடுவானாம். விமலன் இதைக் கேட்டு ''இது ஒரு அதிசயப் பொருள்தான். இதற்கு என்ன விலையானாலும் கொடுத்து வாங்கி விடுகிறேன்'' என எண்ணி பேரம் பேசி ஆயிரம் வராகன் விலை கொடுத்து வாங்கிக் கொண்டான்.

அவனுக்குச் சற்று நேரத்திற்குப் பின் வந்த சமரன் ஒரு அதிசய முக்காலியை ஆயிரம் வராகன்களுக்கு வாங்கினான். அதன் மீது அமர்ந்து எங்கே போக வேண்டும் என்று நினைத்தாலும் அது அவனை அங்கே கொண்டு போய் விட்டு விடுமாம். இவனுக்குப் பின் வந்த அமரன் ஒரு அதிசய முகம் பார்க்கும் கண்ணாடியை ஆயிரம் வராகன் விலைக்கு வாங்கினான். உலகில் எப்பகுதியைப் பார்க்க நினைத்துக் கொண்டு அதைப் பார்த்தால் அதில் அப்பகுதியும் அங்கு நடப்பதும் தெரியுமாம்.

மூவரும் ஓரிடத்தில் சந்தித்து தாம் வாங்கிய அதிசயப் பொருள்களைப் பற்றிக் கூறினர். அப்போது அமரன் ''சரி, நாம் வாங்கியுள்ள பொருள்களெல்லாம் அதிசயப் பொருள்களே. இவை எப்போதாவது நல்ல செயலுக்குப் பயன்படும் என்பதில் சந்தேகமில்லை. இப்போது அரண்மனையில் அரசகுமாரி அனுபமா

என்ன செய்து கொண்டிருக்கிறாள் என்று பார்க்கிறேன்'' எனக் கூறித் தன் அதிசயக்கண்ணாடியை எடுத்துப் பார்த்தான். மறுவிநாடியே அவன் ஆவென அலறினான் அதைக் கேட்ட மற்ற இருவரும் ''ஏன்இப்படிப்பதறு கிறாய்? கண்ணாடியில் நீ என்ன கண்டாய்?'' என்று கேட்டார்கள்.

அமரனும் ''அரசகுமாரி படுத்த படுக்கையாகக் கிடக்கிறாள். சுற்றி லும் எல்லோரும் கவலை தோய்ந்த முகங்களோடு இருக்கிறார்கள். அவளது நிலையைப் பார்த்தால் இன்னமும் சில நொடிகளில் இறந்து விடுவாள்போலிருக்கிறது. இவ்வாறு அவளது நிலை மிகவும் மோசமாக இருக்கிறது'' என்றான். உடனேசமரன் ''நாம் மூவரும் இந்த முக்காலி மீது உட்கார்ந்து கொள்ளலாம். இது நம்மை அரசகுமாரியின் அறையில் கொண்டு போய் விட்டு விடும்'' என்றான். மறு நிமிடமே மூவரும் அந்த முக்காலி மீது உட்கார்ந்தார்கள். முக்காலியும் அவர்களை அரசகுமாரி அனுபமா படுத்திருக்கும் அறையில் கொண்டுபோய் விட்டது.

விமலன் அரசகுமாரியின் கட்டி லருகே போய் தன்னிடமிருந்த எலு மிச்சம்பழத்தை எடுத்து அறுத்து அதன் சாறை அரசகுமாரியின் வாயில் பிழிந் தான். அந்தச்சாறு அரசகுமாரியின் வாயில் சென்றதுமே அவள் படுக்கை யிலிருந்து தானே எழுந்து உட்கார்ந் தாள். அவளது உடல் முன்போலாகி, அழகுடன் விளங்கினாள். இதைக் கண்டு எல்லோரும் மகிழ்ச்சி அடைந் தனர்.

மன்னனும் ''என் மகள் குண மடைந்து முன்போல ஆரோக்கிய மாகவும் அழகாகவும் இருக்கிறாள். இவளைப் பிழைக்க வைப்பவருக்கு இவளை மணமுடித்து வைத்து என் நாட்டில் பாதியையும் அளிப்பதாக அறிவித்திருந்தேன். இப்போது நீங்கள்





மூவரும் வந்தீர்கள். அதனால் என் மகள் பிழைத்துவிட்டாள். அதனால் என் மகளின் திருமணத்திற்கான ஏற்பாட்டைச் செய்ய வேண்டும். உங்களில் யாருக்கு இவளை மணம் செய்து வைப்பது என விளங்கவில்லை'' என்றான்.

அப்போது அமரன் ''என் கண்ணாடி இருந்ததால்தான் அரசகுமாரியின் நிலையைக் கண்டு இங்கு வர முடிந்தது'' எனக் கூறித் தன்னிடமுள்ள அதிசயக் கண்ணாடியைக் காட்டி அதன் சக்தியை விவரித்தான். அப்போது சமரன் ''இந்த அதிசயக் கண்ணாடி இருந்தாலும் நாங்கள் இங்கு வந்து சேர்ந்தது என் அதிசய முக்காலியின் உதவியால்தான்'' என்று கூறி தன் அதிசய முக்காலியை எல்லோருக்கும் காட்டி அதன் சக்தி என்ன என்றும் கூறினான்.

அப்போது விமலன் ''இந்த அதிசயக் கண்ணாடியும் இந்த முக்காலியும் நாங்கள் இங்கு வர உதவினாலும் என் எலுமிச்சம் பழச் சாறைக் குடித்துத் தானே அரசகுமாரி குணமடைந்தாள்'' எனக்கூறி தனக்கு அந்த எலுமிச்சம் பழம் கிடைத்த விதத்தையும் அதன் சக்தியையும் எடுத்துக் கூறினான்.

இதையெல்லாம் கேட்ட மன்னனுக்கும் மந்திரிகளுக்கும் என்ன செய்வது என்ற பெருத்த கவலை ஏற்பட்டது. கண்ணாடியோ, முக்காலியோ அல்லது எலுமிச்சம்பழமோ இவற்றில் ஒன்று இல்லாவிட்டால் கூட அரசகுமாரி பிழைத்திருக்க முடியாது. எனவே இம்மூவருக்கும் சம வாய்ப்பு உள்ளதே என்று எண்ணி மன்னன் ''உங்கள் மூவரில் யார் அரசகுமாரியை மணக்கத் தகுதி பெற்றவர் என்று நீங்களே கூறுங்கள்'' என்று அச்சகோதரர்களிடம் கேட்டான்.

அதுவரை எல்லா விஷயங்களிலும் அந்த சகோதரர்கள் ஒற்றுமையுடன் இருந்து ஒன்று போலச் சிந்தித்து வந்தார்கள். ஆனால் அரசகுமாரியை மணக்கும் வாய்ப்பு கிடைத்தபோது ஒவ்வொருவனும் தானே அத்தகுதியைப் பெற்றவன் என்று அடித்துக் கூறலானான். அது கண்டு மன்னன் ''இது சிக்கலான பிரச்சினையாகிவிட்டது. இன்றைக்கு ஏழாவது நாளில் தர்பாரைக் கூட்டுகிறேன். அதற்கு நாட்டின் பல அறிஞர்கள் வருவார்கள். அவர்கள் என்ன முடிவு சொல்கிறார்களென்று பார்ப்போம்'' என்று கூறினான்.

ஏழாவது நாளில் தர்பார் கூடியது. தர்பாருக்கு வந்தவர்கள் தம் வாதத் திறமைகளைக் காட்டினார்களே யொழிய எந்த வித முடிவையும் அவர்களால் கூற முடியவில்லை. அப்போது அரசகுமாரி அனுபமா எழுந்து நின்று ''இதற்கான தீர்ப்பளிப்பதில் நானும் எனக்குத் தெரிந்ததைக் கூறலாமா?'' எனக் கேட்க அங்கிருந்தவர்களும் ''ஆகா, தாராளமாகச் சொல்லலாம். அதனால் பிரச்சினை தீர்க்கப் படும் என்றால் அது வரவேற்கத் தக்கதே'' என்றார்கள்.

அரசகுமாரியும் ''இதுவரை நீங்கள் இவர்கள் மூவருக்கும் சம வாய்ப்பு உள்ளது என்ற அடிப்படையில் மட்டுமே யோசனை செய்தீர்கள். அது தவறு என நான் நினைக்கிறேன். என் உயிரைக் காப்பாற்றியதில் அம்மூவரில் யாருக்குப் பொறுப்பு அதிகம் என்றே யோசித்தீர்களே யொழிய இன்னொரு முக்கியமான விஷயத்தை மறந்து விட்டீர்கள். இவர்களில் யார் எனக்காகத் தியாகம் செய்தார் என்பதே அது. அதிசயக் கண்ணாடியின் சொந்தக்காரர் இன்னமும் அதைத் தன்னிடமே வைத்திருக்கிறார். அவர் அதை இன்னமும் பயன் படுத்த முடியும். அது போல அதிசய முக்காலியின் சொந்தக்காரரிடம் அது இன்னமும் இருக்கிறது. அவர் அதை இன்னமும் பயன்படுத்த முடியும். ஆனால் எலுமிச்சம் பழத்தைக் கொண்டு வந்தவர் அதனை அறுத்து அதன் சாறை என் வாயில் விட்டு என் நீண்டகால நோயை நொடியில் போக்கி விட்டார். இப்போது அது அவரிடம் இல்லை. எனக்காக அதை அவர் தியாகம் செய்து விட்டார். எனவே இப்படித் தியாகம் செய்தவர் என் கணவராகும் தகுதி பெற்றவரா என்பதையும் யோசித்துப் பாருங்கள்'' என்றாள்.

எல்லோரும் அரசகுமாரியைப் பாராட்டி ''இதுதான் சரியான தீர்ப்பு'' என்று கூறி மகிழ்ச்சியாரவாரம் செய்தார்கள். விமலனுக்கும் அரசகுமாரி அனுபமாவிற்கும் அடுத்த நல்ல முகூர்த்தத்திலேயே திருமணம் நடைபெற்றது. விமலனும் தன் இரு சகோதரர்களையும் நன்கு கௌரவித்தான். விமலனின் தந்தை கனககுப்தனும் தன் புதல்வர்களை எண்ணிப் பெருமிதம் கொண்டான்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1997 ஏப்ரல் மாத இதழில் வெளியிடப்படும்.



S.G. SESHAGIRI



S.G. SESHAGIRI

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ பிப்ரவரி 20-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை-600 026.**

## டிசம்பர் மாதப் போட்டி முடிவு

*முதலாவது போட்டோ* : **இயற்கைத் தாயின் வரங்கள்.**

*இரண்டாவது போட்டோ* : **இணைந்து விளையாடும் கரங்கள்.**

*பரிசு பெற்றவர்* : **ஜோ. சேவியர், உளுத்தூர், 608704.**




Printed by B.V. REDDI at Prasad Process private Ltd., 188, N.S.K. Salai, Madras - 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras - 600 026 (India), Controlling Editor: NAGI REDDI.

AMBULIMAMA (Tamil) February 1997 Regd. No. M. 4863